**SRI A. VEDARATHNAM** : இதை நாஷனல் ஹைவேஸ்-ஸாக எடுத்துக் கொள்ளவேண்டும் என்று இந்த அரசாங்கம் மத்திய அரசாங்கத்திற்கு எப்போது எழுதியது? அதற்கு இதுவரையிலும் பதில் வரவில்லையென்றால், ரிமைன்டர் எழுதி அதை கிடைக்கச் செய்ய அரசாங்கம் ஏதாவது முயற்சி செய்யுமா?

**THE HON. SRI P. KAKKAN** : 24-11-1958-ல் மத்திய அரசாங்கத்திற்கு இந்த அரசாங்கம் எழுதியது. இதைப்பற்றி லோக் சபா எஸ்டிமேட் கமிட்டியும் சிபாரிசு செய்திருக்கிறார்கள். அதோடு வொர்க்கிங் க்ரூப்-ம் சிபாரிசு செய்திருக்கிறது. ஆகவே இவைகள் எல்லாம் நமக்கு சாதகமாகவே இருக்கின்றன. இதற்கு மத்திய அரசாங்கத்தினிடமிருந்து பதில் வந்தவுடன் நடவடிக்கை எடுக்கப்படும்.

MR. SPEAKER : Questions are over.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II.—ANNOUNCEMENTS

### PANEL OF CHAIRMEN.

11 a.m.

MR. SPEAKER : Under Rule 14 (1) of the Madras Legislative Assembly Rules, I nominate the following to be the panel of Chairmen :—

1 Sri V. K. Krishnamurthy,
2 Sri S. Ranganatha Mudaliar,
3 3 Sri V. K. Kothandaraman,
4 Sri S. M. Annamalai,
5 Sri V. Subbiah and
6 Sri Sattanatha Karayalar.

## IV. GENERAL DISCUSSION ON THE BUDGET FOR THE YEAR 1961-62.

MR. SPEAKER : Now we shall commence the general discussion on the Budget.

I have got at present with me a list of ten-persons who will be participating in the discussion. I will allot fifteen minutes for each speaker and if more persons come forward I will have to reduce the time limit.

The hon. Member, Sri N. K. Palanisami may now speak.

* **SRI N. K. PALANISAMI** : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் நிதி அமைச்சர் அவர்கள் வரவு செலவுத் திட்டத்தை சமர்ப்பித்திருக்கின்றார்கள். இதை வரவு செலவுத் திட்டம் என்று சொல்லுவதற்குப் பதிலாக ஒரு எலக்ஷன் மானிஃபஸ்டோ என்று சொன்னாலும் மிகையாகாது. பத்து வருஷ காலத்தில் நாம் என்னென்ன சாதனைகள் செய்திருக்கிறோம், இனி என்னென்ன வேலைகளை செய்யப்போகிறோம் என்பவை எல்லாம் விரிவாகவும் விளக்க

2nd March 1961] [Sri N. K. Palanisami]

மாகவும் கொடுக்கப்பட்டிருக்கிறது. இன்னும் விவசாய அபிவிருத்தியில் எந்த அளவுக்கு நாம் உற்பத்தியை பெருக்கியிருக்கிறோம் என்கின்ற விவரங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அது மட்டுமல்ல, இதில் முக்கியமாக ஆறும் படிவம் வரை எந்தவிதமான கட்டணமும் இல்லாமல் ஏழை மாணவர்கள் படிக்கலாம் என்ற சலுகையை கொடுத்திருக்கிறார்கள். . மேலும் (குறுக்கீடு) இவ்வித குறுக்கீடுகளினால் எனக்கு ஐந்து நிமிடங்கள் போய் விடுகின்றன.......

**MR. SPEAKER :** கனம் பழனிசாமி அவர்கள் பேசும்போது கனம் அங்கத்தினர்கள் குறுக்கிடாமல் இருக்கும்படி கேட்டுக் கொள்கிறேன். இவ்விதம் குறுக்கிடுவதால் ஐந்து நிமிட நேரம் போய்விடுகிறது என்று சொல்லுகிறார்கள்.

**SRI N. K. PALANISAMI :** பஸ் போக்குவரத்தைப் பொறுத்த மட்டில் 157 புதிய பஸ்கள் போடப்போவதாக குறிப்பிட்டிருக்கிறார்கள். இது போன்ற பல முக்கியமான விஷயங்களையும் குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆனால் இன்றைய தினம் இந்த வரவு செலவுத் திட்டத்தை பொதுவாக பார்த்தால் ஒரு ப்ரொடக்ஷன் டார்கெட் என்றுதான் சொல்ல வேண்டும். வெறும் புள்ளி விவரங்கள் கொடுக்கக்கூடிய ஒரு கணக்காய்தான் இருக்கிறதே தவிர கழிந்த ஐந்தாண்டுத் திட்டங்களின் பலனாக எந்த அளவுக்கு வேலையில்லாத் திண்டாட்டம் போயிருக்கிறது, எந்த அளவுக்கு ரீஜனல் டிஸ்பாரிட்டி, இன்டர்னல் டிஸ்பார்ட்டி போய் இருக்கிறது. எந்த அளவுக்கு இந்தத் திட்டங்களின் மூலமாக நமக்கு நன்மை கிடைக்கும் என்பதைப்பற்றி தெரிவிக்கவில்லை. நாம் போட்டிருக்கும் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களின் நோக்கமும் இந்த நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் போக வேண்டும் என்பதுதான். இதற்காக இப்போது மூன்றாவது ஐந்தாண்டு திட்டமும் போட்டிருக்கிறோம். இன்றைக்குள்ள நிலைமையை எடுத்துக்கொண்டால் 100-க்கு 56 பேர்கள் கூலி விவசாயிகளாக இருக்கிறார்கள். அதோடு வேலைக்கு தகுதியாக இருந்தும் வேலை கிடைக்காமல் எத்தனையோ பேர்கள் இருந்து கொண்டிருக்கிறார்கள். இவைகளை எல்லாம் பார்த்தால் இந்த இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களின் பலனாக பாதி அளவுக்குக்கூட வேலையில்லாத் திண்டாட்டம் போகவில்லை என்று தெரிகிறது. அதிலும் சென்னையில்தான் வேலையில்லாத் திண்டாட்டம் அதிகமாக இருக்கிறது என்று தெரிகிறது. டெக்னோ எக்னாமிக்கல் சர்வே என்ற புத்தகத்தில் ' unemployment problem is relatively excessive in Madras' என்று சொல்லப்பட்டிருக்கிறது. அகில இந்தியாவில் அர்பன் ஏரியாவை எடுத்துக்கொண்டால் வேலையில்லாதவர்கள் 2 சத விகிதம் பேர்கள் இருக்கிறார்கள் என்றால் சென்னையில் 5 சத விகிதம் பங்கு இருக்கிறது, சென்னை நகரத்தை எடுத்துக்கொண்டால் தொழிலாளர்கள் மத்தியில் 100-க்கு 10 பேர் வேலையில்லாமல் இருக்கிறார்கள். இந்த நிலைமையில் Techno-economic survey சிபார்சை வைத்துக்கொண்டு

[Sri N. K. Palanisami] [2nd March 1961

தான் 3-ம் ஐந்தாண்டுத் திட்டமும் தயாரிக்கப்பட்டிருக்கிறது என்று நான் நினைக்கிறேன். Techno-economic survey கமிட்டி சொல்லுகிறார்கள், 1961-ம் வருஷத்திலே வேலையில்லாதவர்களின் தொகை 30 லட்சம் அளவை எட்டிவிடும் என்று. ஒரு பக்கம் திட்டம் போடுகிறோம், உற்பத்தியைப் பெருக்குகிறோம், ஆனால் இன்னொரு பக்கத்தில் வேலையில்லாத் திண்டாட்டம் அதிகரித்துக் கொண்டிருக்கிறது. திட்டத்தை நடைமுறைக்குக் கொண்டு வருவதில் எல்லோரும் ஒத்துழைக்கவேண்டும் என்று நிதி அமைச்சர் அவர்கள் கேட்டுக்கொண்டார்கள். அப்படிச் சொல்லுவது செயல்படவேண்டுமானால் சாதாரண ஜனங்களுக்கு இதில் அக்கரை இருக்க வேண்டும். இந்த இரண்டு திட்டங்களினால் வேலையில்லாத் திண்டாட்டம் ஓரளவுக்காவது போயிருந்தால் மக்களுடைய ஒத்துழைப்பு ஏற்படும்.

ரீஜனல் டிஸ்பாரிட்டியைப் பொறுத்தமட்டில் திட்டக் கமிஷன் என்ன சொல்லுகிறது. "There should be reduction of regional disparity of income in the State" என்று சொல்லுகிறது. தொழில் மந்திரி அவர்கள்கூட நேஷனல் டெவலப்மெண்ட் கவுன்ஸிலில் பிரச்னையை கிளப்பியிருக்கிறார். இதைப் பற்றியெல்லாம் நேருஜிகூடச் சொல்லியிருக்கிறார்.

அப்ளேட் எக்கனமிக் ரிஸர்ச் எஸ்டிமேட் பிரகாரம் வருமானத்தைப் பார்த்தால், ஆல் இந்தியா சராசரி வருமானம் ரூ. 271-ஆக இருக்கிறது. நம் சென்னையின் சராசரி ரூ. 229-ஆக இருக்கிறது. கிட்டத்தட்ட 34 சத விகிதம் அகில இந்திய சராசரியை விட மாகாண சராசரி குறைவாக இருக்கிறது. இதற்குக் காரணம் என்ன? இன்றையதினம் தொழில் வளத்திலே பம்பாய்க்கும், வங்காளத்திற்கும் அடுத்தபடி சென்னை இருக்கிறது. விவசாயத் துறையில் சராசரி 1,336 ராத்தல் உற்பத்தி செய்கிறோம். விவசாயம் அபிவிருத்தியடைந்திருக்கிறது. அந்த அளவுக்கு தொழில் துறையில் இல்லாவிட்டாலும் கணிசமான அளவு முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. இந்த வருமான வித்தியாசத்தைப் போக்க மத்திய சர்க்காரின் உதவி அவசியம் வேண்டும். இப்போது ஜனத்தொகை அடிப்படையில் கொடுக்கப்படுகிறது. அதற்குப் பதில் எந்த மாநிலம் பின் தங்கியிருக்கிறதோ அந்த அடிப்படையில் கொடுக்க சர்க்கார் வாதாட வேண்டும். அது மட்டுமல்ல, ஜில்லாவிற்கு ஜில்லா வித்தியாசம் இருக்கிறது, தாலுக்காவிற்கு தாலுகா வித்தியாசம் இருக்கிறது, பிர்க்காவிற்கு பிர்க்கா வித்தியாசம் இருக்கிறது.

(Sri V. Krishnamurthy in the Chair.)

டெக்னோ எக்கனமிக் சர்வேயில் அவர்கள் சொல்லக் கூடிய நேரத்தில், தஞ்சையின் சராசரி 136 ரூபாய், கோயம்புத்தூர் 109, தென் ஆற்காடு 127, வட ஆற்காடு 109, திருச்சி 104, சேலம் 86, மதுரை 90 என்று சொல்லியிருக்கிறார்கள். ஜில்லாவிற்கு ஜில்லா வித்தியாசமாக,

2nd March 1961] [Sri N. K. Palanisami]

குறைந்திருக்கக் காரணம் என்ன? நம் தேசம் அபிவிருத்தியடைந் திருக்கிறது என்று சொல்லும்போது மாகாணத்தை யூனிட்டாக வைத்துக்கொண்டு, ஜனங்களுக்கு எந்த அளவுக்கு பொருள் தேவை, என்னென்ன தொழில் தேவை என்று கணக்குப் போடு கிறோமே தவிர தாலுகா தாலுகாவாக எடுத்துக்கொண்டு, பிர்க்கா பிர்க்காவாக எடுத்துக்கொண்டு அந்தந்தப் பகுதியை அபிவிருத்தி செய்யக்கூடிய அளவில் பார்ப்பதில்லை. ஆகவேதான் சுரேந்திரகார் நல்லகார் என்ற விவசாயக் கமிட்டித் தலைவர் ஒரு தேசத்தை அபி விருத்தி செய்வதில் மாகாணத்தை யூனிட்டாக எடுத்துக் கொள்ளாமல் தகஸிலை யூனிட்டாக எடுத்துக்கொண்டு அபிவிருத்தி செய்யவேண்டுமென்று சொல்லியிருக்கிறார்.

ஆகவே இந்தமாதிரி டிஸ்பாரிட்டியை இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றியபோதிலும் போக்க முடியவில்லை என்று வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

தொழில் துறையிலும் சரி, விவசாயத் துறையிலும் சரி, அதிக அளவு உற்பத்தியாயிருந்தபோதிலும் நிதி அமைச்சர் அவர்கள் உரையிலே சொல்லியிருக்கிறார் தனிப்பட்டவர்களின் வருமானம் குறைந்திருக்கிறது என்று. அதிக உற்பத்தியாகிறது என்று சொன்னால் ஜனங்களுக்கு அதிக வருமானம் வரவேண்டும். உற் பத்தி செய்யக்கூடிய தொழிலாளிகளுக்கு, விவசாயிகளுக்கு அதிக வருமானம் வரவேண்டும். பொது ஜனங்களுக்கு கொஞ்ச விலையில் அதிகப் பொருள்கள் கிடைக்கவேண்டும். அதுதான் உற்பத்திக்கு அர்த்தம். ஆனால் உற்பத்தியாகியும் இருக்கிறது. ஓரளவுக்கு விவசாய உற்பத்தி கொஞ்சம் குறைந்திருந்தாலும் தொழில் துறை யில் 120 பங்கு அதிகம் உற்பத்தி செய்திருக்கிறார்கள். ரிஸர்வ் பாங்க் கணக்குப்படி 1953-ல் தனிப்பட்டவர்களின் உற்பத்தி 104-ஆக இருந்தது. 1959-ல் 150-ஆக உயர்ந்திருக்கிறது. லாபத்தை எடுத்துக்கொண்டால் 1957-ல் 154-ஆக ஆகி இருக்கிறது. இன்றைய தினம் எந்த அளவு உற்பத்தியாகிறதோ அதைவிட லாபம் முந்திக் கொண்டு போகிறது. இந்த அளவுக்கு உற்பத்தியானாலும் தொழி லாளியின் வாழ்க்கைத்தரம் அந்த அளவுக்கு உயர்ந்திருக்கிறதா என்று சொன்னால் 1939-ம் வருஷத்தில் எந்த அளவு இருந்ததோ அதைவிட கொஞ்சம் கூடியிருக்கிறது. இதை நான் சொல்ல வில்லை. பார்லிமெண்டில் பேசக்கூடிய நேரத்தில் நந்தா அவர் களே சொல்லியிருக்கிறார். விவசாயத் தொழிலை எடுத்துக் கொண்டால் இரண்டாவது லேபர் என்க்வொயரி கமிட்டியின் ரிப்போர்ட் வந்திருக்கிறது. அவர்கள் 1953-54-ல் 42 சத விகிதம் அவர்களுக்கு கூலி கிடைத்தது; 1955-56-ல் 22 பங்குதான் கிடைக் கிறது என்று சொல்லுகிறார்கள். இருபது பங்கு அவர்களுக்கு கூலி குறைந்திருக்கிறது. 1954-ல் 59 நாட்கள் வேலையில்லை. அதே நேரத்தில் 1956-ல் 150 நாட்கள் வேலையில்லை. ஆகவே ஒரு பக்கம் உற்பத்தி அதிகம் ஆகிறது. இன்னொரு பக்கத்தில் வேலை நாட்கள் குறைந்து சம்பளம் குறைகிறது. இவ்வளவு திட்டம் போட்டும் அந்தப் பலன் பொது ஜனங்களுக்குப் போகவில்லை, தொழிலா

[Sri N. K. Palanisami] [2nd March 1961

ளிக்குப் போகவில்லை, விவசாயிக்குப் போகவில்லை. ரிஸர்வ் பாங்க் கணக்குப்படி விவசாயிக்கு சம்பளம் 1 ரூபாய், முதலாளிக்கு கிடைப்பது 2.39 ரூபாய். ஒரு பக்கத்தில் கான்ஸெண்ட்ரேஷன் ஆப் வெல்த் இருக்கிறது, ஒரு பக்கத்தில் கான்ஸெண்ட்ரேஷன் ஆப் பாவர்ட்டி இருக்கிறது. இன்றையதினம் விலைவாசி ஏறி யிருக்கிறது. சாதாரண ஜனங்கள் உபயோகிக்கக்கூடிய பொருள் களுக்கு வரி போட்டிருக்கிறார்கள். இதன் மூலம் விலைவாசி அந்த அளவுக்கு மூன்றாவது திட்டத்தில் உயரும் என்று சொல்லப்பட் டிருக்கிறது. எந்த அளவுக்கு இன்வெஸ்ட்மெண்ட் போடப்படு கிறதோ, அந்த அளவுக்கு விலை ஏறுகிறது. இன்வெஸ்ட்மெண்டால் விலை ஏறக்கூடியது ஒன்று. வரியின் மூலமும் விலை ஏறுகிறது. வரி போட வேண்டாமென்று சொல்லவில்லை.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, are we discussing the Central Budget here? There is no use in making a point on a matter over which we have no control. Therefore, if we are to discuss the taxes imposed by the Central Government in this House, we should have some remedy here and only then it will have some meaning. Now, if the hon. Member were to refer to those taxes here, I must say that the Hon. Union Finance Minister is not here to answer to his points.

SRI N. K. PALANISWAI : Because we are affected by these taxes, I am referring to them.

THE HON. SRI C. SUBRAMANIAM : But, those matters cannot be discussed here.

TEMPORARY CHAIRMAN (SRI V. K. KRISHNAMURTHY : Matters with which this House is not directly concerned should not be discussed here. The hon. Member has got one more minute.

SRI N. K. PALANISAMI : Sir, I have lost some time because of these interruptions. So, I request that I may be given some more time. ஆகவே இப்படிப்பட்ட ஒரு வரி போட வேண்டா மென்று சொல்லவில்லை. ஆனால் இவ்வளவு வரி போட்டும். . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : Again, the hon. Member is persisting in his reference to the Central taxes in spite of the Chair's ruling.

SRI N. K. PALANISAMI : வரி யார்மேல் போடவேண்டுமோ அவர்கள் மேல் போடவேண்டும். திட்டங்களை நிறைவேற்ற பணம் வேண்டும். ஆனால் இப்படிப்பட்ட வரிகள் போடுவதினால் சாதாரண ஜனங்கள் . . . . . . . . .

TEMPORARY CHAIRMAN (SRI V. K. KRISHNAMURTHY) : The hon. Member Sri A. P. C. Veerabahu may now speak.

SRI N. K. PALANISAMI : Sir, I may be allowed a few more minutes.

2nd March 1961]

**TEMPORARY CHAIRMAM** (SRI V. K. KRISHNAMURTHY): No. the hon. Member has already taken up three minutes over and above the time allotted to him.

* **SRI A. P. C. VEERABAHU**: தலைவர் அவர்களே, நிதி மந்திரி அவர்கள் சமர்ப்பித்த இந்த வரவு செலவுத் திட்டத்தையும், அதைப் பூரணமாக நமக்கெல்லாம் அவர் எடுத்துச் சொல்லிய விவரத்திற்கும் நான் அவரைப் பாராட்டுகின்றேன். இந்த வரவு செலவுத் திட்டத்தை ஆதரிக்கின்றேன். அந்த ஆதரிக்கும் முகத்தான், நான் சில எண்ணங்களை இந்தச் சபையின் முன் வைக்க முற்படுகின்றேன். நமது வரவு செலவுத் திட்டம் இந்த மாகாணத்தினுடைய எகனமிக் கிளைமேட் அதாவது பொருளாதார நிலை நல்லவிதமாக இருக்கிறது என்பதை எடுத்துக் காட்டுகிறது. மூன்று, நான்கு வருஷங்களாக நமது வரவு செலவுத் திட்டத்தை பற்றாக் குறையாக நாம் சமர்ப்பிக்கின்ற காலத்திலிருந்தாலும்கூட, அது முடிவடைகின்ற காலத்தில் அது உபரியாகவும், ஆனால் அதிகமான உபரித் தொகையாக இல்லாமலும், ஏதோ பற்றாக் குறை என்ற அளவில் இல்லாமல் சரிக்கட்டிக் கொண்டு போகக்கூடிய நிலையைத்தான் நாம் பார்த்து வருகின்றோம். அந்த தைரியத்தோடு கூடிய, அந்த முன்யோசனையோடு கூடிய அளவில்தான் நம்முடைய வரவு செலவுத் திட்டம் தயாரிக்கப்பட்டு, பற்றாக்குறையை சரிக்கட்டிக்கொண்டு போகக் கூடிய அளவில் இருந்திருக்கிறது. இப்போதும் அதே முறையில் தான் பற்றாக்குறையை சரிக்கட்டிக்கொண்டு போய்விடும் என்பதற்காக புதிய வரிகள் எதுவும் இல்லாமல், நமது வருமானம் நாம் வைத்திருக்கக்கூடிய இலக்குகளுக்கு சற்று அதிகமாகவே வரக் கூடிய அளவில் இருக்கிறது என்பதை நமது வரவு செலவுத் திட்டம் காட்டுகின்றது. ஆனால் புதிய வரிகள் நாம் எதுவும் போடவில்லை என்றாலும்கூட, பழைய வரிகளை அதே நிலையில் வைத்துக்கொள்ள வேண்டுமென்ற நிலையில் நாம் போவது அவ்வளவு சரியல்ல என்று நினைக்கிறேன்.

நிதி மந்திரி அவர்கள் இரண்டு வருஷங்களுக்கு முன்னால் சொன்னதுபோல், இந்த வருஷ வரவு செலவுத் திட்டத்திலே சாப்பாட்டு இனங்களுக்காக அதாவது தானியங்களுக்கு விற்பனை வரியிலிருந்து விலக்களிக்கப்படுமென்று எதிர்பார்த்தேன். ஆனால் அப்படி ஒன்றும் தெரிவிக்கப்படவில்லை. 2%-லிருந்து 1%-ஆக குறைக்கப்படும், அதுமாதிரி இன்னும் கொஞ்ச நாட்களில் அது பூரணமாக எடுத்துவிடப்படும் என்று கூறினார்கள். அதைப் பூரணமாக எடுக்காவிட்டாலும், ½%-ஆவது இந்த வருஷத்தில் நீக்கப்படும் என்று நான் எதிர்பார்த்தேன். இப்போது 2½ கோடி ரூபாய் பற்றாக் குறையாக இருக்கும்போது, நாம் எப்படி இந்த விற்பனை வரிக்கு விலக்களிக்க முடியுமென்று நினைத்து, விட்டிருக்கலாம் என்று நினைக்கிறேன். எப்படியிருந்தாலும், சென்ற கால அனுபவத்தைப் பார்க்கும்போது, இந்த ஆண்டு 5 கோடி ரூபாய் உபரி ஏற்பட்டாலும் ஆச்சரியப்படுவதற்கு இல்லை. இரண்டு

[Sri A. P. C. Veerabahu] [2nd March 1961

வருஷத்திற்கு முன்னால் 68 கோடியாக இருந்த நமது பட்ஜெட் இப்போது 91 கோடியாகி இருக்கிறது. இந்த வருஷத்தில் அது 95 கோடி ரூபாயாக ஆகுமென்று நம்பிக்கைத் தெரிவித்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. ஏனென்றால், இன்கம் டாக்ஸ் இந்த வருஷத்தில் 6 கோடி என்று போட்டிருக்கிறார்கள். வருகின்ற வருஷத்தில் இது 10 கோடி ரூபாயாக பெருகுகின்ற அளவுக்கு வாய்ப்பு இருக்கிறது என்று கேள்விப்பட்டேன். ஆகவே இப்போது பற்றாக்குறை பட்ஜெட்டாகப் போடப்பட்டிருப்பது துண்டு எதுவும் ஏற்படாமல் பூர்த்தியடைய வாய்ப்பு இருக்கிறது. ஆனால் அதே நேரத்தில் சாதாரண மக்களை பாதிக்கக்கூடிய இந்த உணவு தானியத்தின் மேலுள்ள விற்பனை வரியை நீக்கியிருந்தாலும், அதனால் 2 கோடி ரூபாய்தான் துண்டு விழுந்திருக்கும் என்று நினைக்கிறேன். தவிர, இன்னும் மேற்கொண்டும் இந்த விற்பனை வரி இலாகாவின் மூலம் கிடைக்கக்கூடிய 18 கோடி ரூபாய் வருமானத்திலிருந்து, இந்த வருஷம் 20 கோடி அல்லது 21 கோடி ரூபாய் என்று இறுதியில் அதிகமாக வருமானம் வருவதற்கும் ஒரு வாய்ப்பு இருக்கிறது என்று நினைக்கிறேன். நம்முடைய நாட்டிலே இப்போது தொழில் வளர்ச்சி அதி தீவிரமாக முன்னேறிக்கொண்டு வருகின்ற காரணத்தினாலும், இந்த வருமானம் அதிகமாக ஏற்பட ஒரு வாய்ப்பு இருக்கின்ற காரணத்தினாலும், தான்ய விற்பனைக்கு விதி விலக்கு அளிக்க வேண்டுமென்று சர்க்காரை நான் கேட்டுக்கொள்கிறேன்.

அது மாத்திரமல்ல. கலால் வரியாலும், இந்த வருஷம் அதிகமான வருமானத்தை நாம் எதிர்பார்க்கலாம். நம்முடைய மாகாணத்திலே இப்போது ஜீனி உற்பத்திசாலைகள் நிறைய ஏற்பட்டுக்கொண்டு வருகின்ற காரணத்தினால், இந்த ஜீனி உற்பத்திச் சாலைகளின் மூலம் நமக்கு ஏராளமான வருமானம் வருவதற்கு ஒரு வாய்ப்பு இருக்கிறது. இதையெல்லாம் நான் ஏன் இவ்வளவு சுற்றி வளைத்துக்கொண்டு சொல்கிறேன் என்று சொன்னால், இந்த உணவு தானியத்திற்கு சற்றுச் சலுகை அளிக்க சர்க்கார் முன்வரவேண்டுமென்பதற்காகத்தான். இந்த உணவு தானியத்தின் மீது எப்படியாவது 2%-லிருந்து, 1½%-க்கு குறைக்க முடியுமா என்று இந்த வருஷத்திலேயே நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கவேண்டும். அதைச் சர்க்கார் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அது மாத்திரமல்ல. புதிய வரிகளை நாம் போடுவதற்கு முயற்சி செய்கின்ற காலத்திலே, இப்போது ஏராளமான தொழிற்சாலைகள் உருவாகி வருகின்றன. அதனால் அர்பன் ஏரியாவில் நிலத்தினுடைய விலைகள் வீடு கட்டும் மனையாக இருந்தாலும் சரி, அல்லது தொழிற்சாலை நிறுவும் மனையாக இருந்தாலும் சரி, நிலத்தின் விலை தாறுமாறாக ஏறுகின்றன. 1958-லே ஒரு ஏக்கர் 1,000, 1,500 என்றிருந்தது. இப்போதுள்ள நிலையைப் பார்த்தால் அதே நிலம் 5,000 ரூபாய், 7,000 ரூபாய் என்று விலை ஏறிக்கொண்டே போகிறது. இதற்குக் காரணம் பூரணமாக சர்க்கார்தான். பெரிய அபிவிருத்தித்

2nd March 1961] [Sri A. P. C. Veerabahu]

திட்டங்களை நாம் ஏற்படுத்தும்போது, அந்த இடங்களுக்கு கிராக்கி ஏற்படுகிறது. நியாயப்படி அந்த கிராக்கித் தொகையெல்லாம் சர்க்காருக்குத்தான் சேரவேண்டும். அதை நாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். இப்படி நான் நிலத்தின் விலை ஏற்றத்தைப் பற்றிச் சொல்லும்போது, விவசாயத்தைப் பற்றிக் குறிப்பிடவில்லை. அதுவும், தொழிற்சாலைகள் உருவாகி வருகின்ற நகரப் பிரதேசங்களில் யாரும் எதிர் பாராத விதமாக 100 மடங்கு, 200 மடங்கு என்று நிலத்தின் விலை ஏறிக்கொண்டு போகிறது. சாதாரண நிலத்திற்கு இந்தவிதமாக விலையைக் கூட்டுவதற்கு நிலச் சொந்தக்காரர்களுக்கு ஒரு சந்தர்ப்பம் ஏற்படுகிறது. ஆனல் இந்த விலை சர்க்கார் ஏற்படுத்தும் அபிவிருத்தி திட்ட வேலைகளினுல் ஏற்படுவதால், அப்படி நிர்ணயிக்கப்படும் விலையின் பெரும்பகுதி சர்க்காருக்குச் சேரவேண்டும். Tax on unearned income என்றிருக்கிறது. இம்மாதிரி நிலத்தை விற்று, அதன்மூலமாக கிடைக்கக்கூடிய வருமானத்தை ஒருவன் எடுத்துக்கொள்வதைத் தடுக்கவேண்டும். நிலத்தை வாங்கி, ஸ்பெகுலேஷனில் வைத்துக்கொண்டு, அபிவிருத்தித் திட்டங்கள் பின்னுல் ஏற்படும், அப்போது லாபத்திலே விற்கலாம் என்றிருந்தால், அப்படி கிடைக்கக்கூடிய லாபத்திலே Tax on capital gains, இன்கம் டாக்ஸ் கொடுக்க வேண்டியிருக்கிறது. அப்படி கிடைக்கக்கூடிய ஷேர் நம் மாகாணத்திற்கு வருகிறதென்றுலும், நாம் அதை நேரடியாகப் பெறுவதற்கு முயற்சியை மேற்கொண்டால், பெருவாரியாக நாம் எதிர்பார்ப்பதற்கு மேல் வருமானம் கிடைக்கும்.

பல அபிவிருத்தித் திட்டங்களை நாம் இப்போது மேற்கொள்ளுகிறோம். தூத்துக்குடி துறைமுகத்தை எடுத்துக்கொண்டால், அங்கு விஸ்தரிப்பு வேலை செய்வதற்காக இன்னும் 4 வருஷங்களில் 15 கோடி ரூபாய் செலவிட இருக்கிறோம். துறைமுகத்தைச் சுற்றியுள்ள நிலங்கள் யாருடைய முயற்சியும் இல்லாமல், விலை ஏறுகிறது. அதன் சொந்தக்காரர்களுக்கு பெரிய அளவில் விலை கிடைக்க இருக்கிறது. ஆகவே அதன் பெரும் பகுதியை சர்க்கார் எடுத்துக்கொண்டால், அதன்மூலம் கிடைக்கக்கூடியதை வைத்துக் கொண்டு, உணவு தானியத்திற்கு மானியம் கொடுக்க உபயோகிக்கலாம் என்பதற்காக இப்படி சுற்றி வளைத்துச் சொல்கிறேன். ஆகவே, பற்றுக்குறை பட்ஜெட் என்ற நிலையில் இல்லாமல், 4 கோடி ரூபாய் உபரி கிடைக்கக்கூடிய ஒரு காரணத்தினுல், அதே நேரத்தில் பல அபிவிருத்தி வேலைகள் மேற்கொள்ள இருக்கின்ற காரணத்தினுல், அப்படி ஏற்படுகின்ற அபிவிருத்தி வேலைகளினுல் கிடைக்கக்கூடிய லாபத்தை வைத்துக்கொண்டு, உணவு தானியத்திற்கு சர்க்கார் விற்பனை வரியிலிருந்து விலக்களிக்க பெருமுயற்சி செய்ய வேண்டும்.

11–30 a.m.

அடுத்தபடியாக, விவசாய உற்பத்திக்காக நம் அரசாங்கம் பல நல்ல காரியங்களைச் செய்திருக்கிறது. உர உற்பத்தியைப் பெருக்க நடவடிக்கைகள் எடுத்து இருக்கிறது. இரண்டு வருஷகாலத்தில்

நிலைமை சீர்பட்டுவிடும் என்று சர்க்கார் சொல்லியிருக்கிறார்கள்; நமக்கும் அம்மாதிரிச் சீர்பட்டுவிடும் என்ற நம்பிக்கை இருக்கிறது. ஆனால், அதே நேரத்திலே, இந்த ராஜ்யத்தில் பெரும் தண்ணீர் வசதிகள் அதிகமாக இல்லை, ஆகையால் அதிகமாக பெரும் வேலைகள் எடுக்க வசதியில்லை என்று சொல்லப்படுகிறது. இன்னும் கழிவு போகும் தண்ணீரை சீர்படுத்தி உபயோகிக்கும் திட்டங்கள் போடப்பட்டிருக்கின்றன. குளங்களை ஆழப்படுத்தும் திட்டங்களும் போடப்பட்டிருக்கின்றன. சுமார் 50,000 குளங்கள் இருக்கின்றன; அவற்றில் வருஷத்திற்கு ஓராயிரம் குளங்கள் வீதம் எடுத்து மராமத்து செய்வதானால், இந்த வேலை குறைந்த பட்சம் 10 வருஷத்திற்கு மேலும் நீடிக்கும் நிலையில் இருக்கிறது. இந்த வேலையை துரிதப்படுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த 50,000 குளங்களையும் வருஷத்திற்கு பத்தாயிரம் என்று எடுத்து வேலை செய்து, இவை எல்லாவற்றையும் மூன்றாவது திட்ட காலத்திலேயே மராமத்து செய்து விடவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படிச் செய்வதில் பல சங்கடங்கள் இருக்கலாம். இருந்தாலும், தைரியமாக நடவடிக்கைகளை எடுத்து, துரிதமாக செய்த நீர்ப்பாசன வேலையாக அமையவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

என் பகுதியில், கோரம் பள்ளம், பேய்க்குளம், ஆறுமுக மங்கலம் முதலியவை வெகு முக்கியமான குளங்கள். அவற்றால் ஒவ்வொரு குளத்திலும் குறைந்த பட்சம் 5,000 எக்கராக்கள் சாகுபடியாகும். அப்படிப் பார்க்கும்போது, 15,000 ஏக்கராக்கள் சாகுபடியாகக்கூடிய குளங்கள் இவை. இந்தக் குளங்களை ஆழப்படுத்தவேண்டும் என்று நீண்ட நாட்களாக வற்புறுத்தி வந்திருக்கிறேன். பரீட்சார்த்தத் திட்டங்கள் போட்டும் அவை நிறைவேறாமல் இருக்கின்றன. ஐந்து வருஷகாலமாக முயற்சிகள் செய்தும் அந்தக் குளங்கள் பற்றிய திட்டங்கள் அப்படியே இருக்கின்றன என்பதை கனம் மராமத்து இலாகா அமைச்சரவர்களிடம் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அதிலும் பாசன வசதி பெற்ற குளம் என்று பேய்க்குளத்தை பரீட்சார்த்த திட்டத்திற்கு எடுத்துக் கொண்டார்கள். பாசன வசதியைப் பெருக்கவேண்டும், மராமத்துச் செய்யவேண்டும் என்று பரீட்சார்த்தத் திட்டத்திற்கு பேய்க்குளத்தை எடுத்துக் கொண்டார்கள். ஆனால் ஐந்து வருஷமாகியும் அது நிறைவேறவில்லை. பரீட்சார்த்தத் திட்டங்களை யாவது துரிதமாக எடுத்து, தீவிரமாக வேலை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். பல நல்ல காரியங்களைச் செய்திருக்கிறோம் என்று, மேலும் செய்ய வேண்டிய காரியங்களில் அசிரத்தையாக இருக்கக்கூடாது என்று தெரிவித்துக் கொள்ள ஆசைப்படுகிறேன். நல்ல காரியங்கள் பல செய்திருக்கிறோம்; நல்ல காரியங்களின் விளைவாக, நல்ல பொருளாதார அமைப்பு இருக்கிறது; சமுதாயமும் சீராக இருக்கிறது. ஒரு ஸ்டேபிள் கவர்ன்மெண்டையும் அமைத்திருக்கிறோம். ஆகவே இந்த சந்தர்ப்பத்தில் செய்ய வேண்டிய வேலைகளை, குறை

2nd March 1961] [Sri A. P. C. Veerabahu]

பாடுள்ள வேலைகளை, துரிதமாகச் செய்ய வேண்டும். குளங்களை ஆழப்படுத்தும் வேலையை ஆரம்பிக்கவேயில்லை என்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். இந்த பரீட்சார்த்தத் திட்டத்தை நிறை வேற்ற நடவடிக்கை எடுக்கவேண்டும்.

மேலும் மேலும் விவசாயத்தைப் பெருக்கவேண்டுமென்றால், கிணற்று வசதியைப் பெருக்க வேண்டியது அவசியம். கிணற்று ஊற்றுக்கள் இருக்கக்கூடிய, அதற்கு உதவக்கூடிய குளங்கள் ஆழப்படுத்தப்பட்டு, மராமத்து செய்யப்பட்டிருந்தால்தான், அவை நல்ல விதமாகப் பயன்படுத்தப்பட்டால்தான், கிணறுகளில் ஊற்று எடுக்கும். இந்த வருஷத்தில் ஏராளமான மழைபெய்து விட்டிருக்கிறது. ஆனால், குளங்கள் ஆழமில்லாததாக இருந்த தால் ஏராளமான தண்ணீர் வீணாகப் போய் இருக்கிறது. தாம்பர பர்ணியிலிருந்து நாள் ஒன்றுக்கு 20,000 க்யூசெக் அளவில் 45, 50 தினங்களுக்கு தண்ணீர் வீண் அடைந்திருக்கிறது. அப்படிப் போகும் கழவுத் தண்ணீரை நாம் தடுக்க முடியவில்லை. பாசன வசதி பெற்றுள்ள குளங்கள் ஏராளமாக இருக்கையில், அவை நல்லவிதத்தில் மராமத்து செய்யப்பட்டிருந்தால், இருபோகம் தடையின்றி சாகுபடி செய்ய சௌகரியமாக இருக்கும். அது ஊற்று எடுக்கும் கிணற்று வசதிகளையும் பெருக்க முடியும் என்பதை சர்க்காரின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்பு கிறேன்.

(மணியடிக்கப்பட்டது)

நம் மாகாணம் தொழில் மயமாக ஆகிக் கொண்டிருக்கின்ற இந்த சமயத்தில், டிரான்ஸ்போர்ட்டு நல்ல விதமாக அமைக்கப் படவில்லை என்பதை அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். எங்கும் டபிள் லைன் இல்லை. நம் மாகாணத்தில் குமரிப் பகுதியிலும், சேலம்-பங்களூர் பாதையையும் மட்டும் போட்டால் காணாது. திருச்சி-தூத்துக்குடிப் பாதையை பிராட் கேஜாக போட்டாலொழிய, தொழில் வளர்ச்சியடைந்ததாகாது; தொழில் வளர்ச்சியின் பூரண பலனை அடையமுடியாது.

(மணியடிக்கப்பட்டது)

இன்னும் இரண்டு நிமிஷம் கொடுங்கள், ஸார். திருச்சி— தூத்துக்குடிப் பாதையை டபிள் லைனாக்க முயற்சிகள் எடுத்துக் கொள்ளவேண்டும். நமக்கு ரெயில்வே வளர்ச்சி சென்ட்ரல் கவர் மெண்டில் அதிகமாகக் கொடுக்கவில்லை. என் பிராந்தியத்திற்காக நான் சொல்லவில்லை. அம்மாதிரி எங்கு செய்தாலும் சரி; மதுரை ஸ்- திருச்சி பாதையைச் செய்தாலும் சரி. எதானாலும், ஆரம்ப முயற்சியாவது செய்யத் தொடங்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

பிக் அயர்ன், கோல் சம்பந்தப்பட்டவரை ஏராளமாக உற்பத்தி செய்கிறோம், ஏற்றுமதி செய்யும் அளவுக்குக்கூட உற்பத்தி செய் கிறோம். என்றாலும், சிறு தொழில்கள் பூராவும் அவற்றை வாங்கி உபயோகிக்கக்கூடிய நிலையில் இல்லை. வாகன் கிடைக்கவில்லை

என்ற கஷ்டமும் இருக்கிறது. நிலக்கரிக்கு அதிக விலை கொடுக்க வேண்டிய நிலை இருக்கிறது. அவற்றை கப்பல் மூலமாகக் கொண்டு வந்து உபயோகிக்கக்கூடிய அளவுக்கு ஸ்மால் ஸ்கேல் இண்டஸ்ட்ரீஸுகளுக்கு சக்தி இல்லை. நிலக்கரிக்கும் குறைவான பூல் பிரைஸ் விதிக்கலாம். பார்டிலைசர், ஷுகர் போன்றவைகளுக்கு பூல் பிரைஸ் விதிக்கிறோம். ஆகவே நிலக்கரிக்கும், பூல் பிரைஸ் ஏன் விதிக்கக் கூடாது? அப்படிச் செய்தால், சர்க்கார் எடுக்கும் சிறு தொழில் வளர்ச்சிக்கு நல்லவிதமான ஊக்கம் அளித்ததாக இருக்கும். அவைகளைச் செய்து கொடுக்க வேண்டும் என்று தொழில் அமைச்சரவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

பஞ்சாயத்துக்களுக்கு ஏராளமான பவர்ஸ் கொடுத்து இருக்கிறோம். ஏராளமான பொறுப்புகளையும் கொடுத்திருக்கிறோம். விவசாய முன்னேற்றத்திற்கு வசதியளிக்க, நிதிவசதி செய்து கொடுக்க நிலவரியிலிருந்து பேர்பாதி கொடுப்பதாகச் சொல்லுகிறோம். நிலவரி பூராவையும் கொடுத்தால் நல்லதாக இருக்கும். சென்னை மாகாணத்தில் ஆறு கோடி, ஏழு கோடி கிடைக்கும்; அது பூரணமாக பஞ்சாயத்துகளுக்கு அளிக்கப்பட்டால், அவர்கள் பொறுப்பை வகிக்க நல்ல ஊக்கமளித்ததாக இருக்கும்; ஆகவே, நிலவரியைப் பூரணமாகப் பஞ்சாயத்துகளுக்கு ஒதுக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, இந்தச் சந்தர்ப்பத்தை அளித்ததற்காக நன்றி தெரிவித்துக் கொண்டு என் உரையை முடிக்கிறேன். வணக்கம்.

* SRIMATHI RAJATHI KUNCHITHAPATHAM: தலைவர் அவர்களே, இந்த ஆண்டின் நிதிநிலை அறிக்கையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். ஆளும் தரப்பைச் சேர்ந்தவள் என்ற அர்த்தமற்ற அவசியத்தை விட்டு, அர்த்தத்தோடு அடைந்திருக்கும் அபிவிருத்திகளை எடுத்துச் சொல்ல, அதுவும் இந்தப் பத்தாண்டு காலத்தில் செய்துள்ள நல்ல சேவைப் பட்டியலை எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். இது கடைசி பட்ஜெட் என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. சர்க்காரின் முன்னேற்றத் திட்டங்களையும், மக்கள் அடைந்திருக்கும் நன்மைகள் பற்றி கொடுத்திருக்கும் பட்டியலையும் பார்த்து எதிர்க் கட்சி அங்கத்தினர்கள் இதை ஒரு எலெக்ஷன் பிரசாரமாக எடுத்துக் கொள்ளலாம் என்றார்கள். ஆளும் தரப்பில் மட்டுமல்ல, எதிர்த் தரப்பில் உள்ளவர்கள்கூட இதைத் தேர்தல் பிரசாரத்திற்கு எடுத்துக் கொள்ளலாம். ஏனென்றால், இப்படிப்பட்ட எதிர்க்கட்சி இருந்ததால்தான், இந்த வகையில் திட்டங்கள் கொண்டுவர முடிந்தது சர்க்காரால் என்று எடுத்துக் காட்டும் முறையில் அமைந்திருக்கிறது இந்த ஆண்டு நிதி நிலை அறிக்கை.

இதிலே, ரூ. 2.85 லட்சம் பற்றுக்குறை என்று குறிப்பிட்டு இருந்தாலும்கூட, பற்றுக் குறையே முன்னேற்றத்தைக் காட்டுகிறது. கடந்த ஆண்டில் ரூ. 33.5 லட்சம் பற்றுக்குறை என்று காட்டினார்கள்; ஆனால், கடைசியில் ரூ. 123.75 லட்சம் உபரி என்று

காட்டக்கூடிய திறமை வாய்ந்த அமைச்சர்கள் இருக்கும்போது, இந்த ஆண்டிலும் இந்த பற்றுக்குறை உபரியாக வரும் என்பதில் சந்தேகமில்லாமல் இருக்கலாம். அந்த வகையிலே திறமையாக பணியாற்றுகிற அரசாங்கம் ஒவ்வொரு இடத்திலும் எவ்வாறு முன்னேறியிருக்கிறோம் என்பதையும் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள் விவரமாக. முக்கியமாக விவசாயத்தை எடுத்துக் கொண்டால் நாட்டில் உணவுப் பற்றுக்குறையைப் போக்குவதற்கு பல திட்டங்களை ஏற்படுத்தியிருக்கிறார்கள். ஆரம்பத்தில் உணவு உற்பத்தி 19 லட்சம் டன்னாக இருந்தது இப்போழுது 35 லட்சம் டன்னுக்கு மேலாக நாம் உற்பத்தி செய்வதற்கு வேண்டிய திட்டங்களைத் தீட்டியிருக்கிறோம். அம்மாதிரி திட்டம் போட்டு இப்பொழுது 16 லட்சம் டன் அதிகமாக உணவு உற்பத்தி செய்திருக்கிறோம். அது மட்டுமல்ல. இன்னும் உற்பத்தியை அதிகமாகப் பெருக்கி நாட்டின் சயதேவையைப் பூர்த்தி செய்வதற்கு விவசாயம் சம்பந்தப்பட்ட வரை என்னென்ன திட்டங்கள் தேவையோ அத்தனையும் போட்டிருக்கிறோம். உர உற்பத்தியை அதிகமாக்குவதற்கு வேண்டிய ஏற்பாட்டையும் செய்திருக்கிறோம். முன்பு 48,000 டன் உர உற்பத்தி இருந்த நிலைமையில் இப்பொழுது 1 லட்சம் டன் வரையில் உற்பத்தி செய்கிறோம். இன்னும் அதிக உற்பத்தி செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் செய்திருக்கிறோம். நெய்வேலித் திட்டத்தின்கீழ் ஏற்படுத்தப்பட்டிருக்கும் உரத் தொழிற்சாலை வருகிற வருஷத்திலிருந்து 3½ லட்சம் டன் உரம் உற்பத்தி செய்யும். அதோடுகூட தனியார் துறையிலே நெல்லையில் ஒரு உர தொழிற்சாலை வருகிறது என்பதைக் கேட்க நாங்கள் எல்லோரும் மிகவும் சந்தோஷப்படுகிறோம், அதை வரவேற்கிறோம்.

இதேபோல விவசாய உற்பத்தியை எடுத்துக்கொண்டாலும், அது மிகவும் திறமையாக நடந்துக்கொண்டிருக்கிறது என்பதைக் குறிப்பிடாமல் இருக்க முடியாது. பிற மாநிலங்களில் உற்பத்தி ஒரு ஏக்கருக்கு 750 ராத்தலாக இருக்கையில் நம்முடைய மாநிலத்தில் 1,332 ராத்தல் உற்பத்தி செய்து காட்டியிருக்கிறோம். அரிசியில் மட்டுமல்ல இந்த விளைச்சல் அபிவிருத்தி. பருத்தியை எடுத்துக் கொண்டாலும்கூட ஒரு ஏக்கர் ஒன்றுக்கு இரட்டிப்பாக நாம் உற்பத்தியை அதிகப்படுத்திக் காட்டியிருக்கிறோம். அதே போல கரும்பு உற்பத்தியிலும் ஏக்கருக்கு அதிகமாக உற்பத்தி செய்து காட்டியிருக்கிறோம். பிற மாநிலங்களில் ஏக்கர் ஒன்றுக்கு 14 டன்கள் உற்பத்தி செய்திருக்கிறார்கள். நம் மாநிலத்தில் 25 டன்கள் உற்பத்தி செய்து காண்பித்திருக்கிறோம். இதையெல்லாம் கூறுவதற்குக் காரணம், இம்மாதிரியாக அரசாங்கம் நல்ல வகையிலே நல்ல திறமையோடு இயங்கி, மக்களிடையே அவ்வப்பொழுது எழக்கூடிய தேவையைப் பூர்த்தி செய்து, மக்களிடம் வரிப் பணத்தை வாங்கி அதற்கு நல்ல முறையிலே திட்டங்களை வகுத்து அதை மக்களுக்குத் திறமையாகப் பங்கிட்டுக் கொடுக்கும் நிலைமையில் அபிவிருத்தித் திட்டங்களை நிறைவேற்றி வருகிறார்கள் என்பதை நாம் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம்.

பெரிய தொழில்களை எடுத்துக் கொண்டால், இந்த நாட்டிலே விவசாயத்தை மட்டும் கவனித்துக் கொண்டால் நாடு நாடாகி விட முடியாது. ஐந்து பேர்களில் நான்கு பேர்கள் விவசாயத்திற்குப் போய்விட்டால், ஏதோ ஒன்றிரண்டு பேர்கள் தொழிலை கவனிக்கக் கூடிய நிலைமையில் தொழில் வளமே ஏற்படாது. உணவுச் சோலை யாக மட்டும் ஆகிவிட்டால் போதாது. தொழில் சோலையாகவும் நாட்டை ஆக்கவேண்டும். தொழில் மணம் கமழக்கூடிய அநேக திட்டங்களை நாம் எடுத்துக் கொண்டிருக்கிறோம். நெய்வேலித் திட்டம் நாம் எதிர்பார்க்கக்கூடிய ஒரு பெரிய காமதேனுவாக தமிழ் நாட்டில் அமையும். அதோடு சேலம் இரும்புக் கனித் திட்டம் இருக்கிறது. அதேபோன்று காவேரிப் பகுதி எண்ணெய் வளர்த் திட்டம்பற்றி நம்பிக்கையூட்டும் அபிவிருத்தி ஏற்படக் கூடும் என்ற நிலைமையிலே இங்கே அறிக்கை கொடுத்திருப்பது நாம் மிகவும் வரவேற்கத் தகுந்ததாக அமைந்திருக்கிறது.

சிறு தொழில்கள் சம்பந்தமாகக் கதர் திட்டத்தைப்பற்றி சொல் லும்பொழுது ஓரிரண்டு வார்த்தைகள் கூற விரும்புகிறேன். கதர் திட்டத்தில் ஆரம்பத்தில் 26,500 நூற்பவர்கள் இருந்தார்கள் என்றும் இப்பொழுது 10 ஆண்டுகளுக்குப் பின்னால் 1,81,000 பேர் கள் இருக்கிறார்கள் என்றும், நெசவு செய்பவர்களின் எண்ணிக்கை 716-லிருந்து 9,000-ஆகப் பெருகியிருக்கிறது என்றும் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். அதே சமயத்தில் உற்பத்தி அளவைக் கொடுக்கும்பொழுது ஆரம்பத்தில் 66 லட்சம் கெஜமாக இருந்த கதர் உற்பத்தி இப்பொழுது 80 லட்ச கெஜத்திற்குத்தான் அதிக மாகியிருக்கிறது என்று குறிப்பிடப்பட்டிருப்பதற்கு என்ன காரணம் என்று என்போன்றவர்களுக்குத் தெரியவில்லை. அதை கனம் அமைச்சர் அவர்கள் விளக்குவார்கள் என்று நினைக்கிறேன். நூற்பவர்களின் எண்ணிக்கை சுமார் ஒன்றுக்கு எட்டு மடங்காகக் கூடியிருக்கும்பொழுது, அதிலே ஈடுபட்டிருக்கிற நெசவாளிகளின் எண்ணிக்கை ஒன்றுக்குப் பத்து மடங்காகக் கூடி யிருக்கும்பொழுது, உற்பத்தியாகக்கூடிய ஜவுளி மட்டும் 1-½ பங்கு அளவுகூட முன்னேறாமல், அபிவிருத்தி இல்லாமல் இருப்பதற்குக் காரணம் என்ன என்பது தெரியவில்லை. முக்கியமாக அம்பர் ராட்டை சர்க்கார் தரப்பிலே செய்யக்கூடிய நிலையிலே, நெல்லையில் பார்த்தோமானால் 5 தடவை 100 பேர்களுக்குப் பயிற்சி அளிக்கக் கூடிய திட்டத்தில், ஒரு பரிசிரமாலயம் நடந்து முடிந்த பிற்பாடு அதில் 100 பெண்கள் நூற்புப் பயிற்சி பெறுகிறார்கள்; ஆனால் அதிலே 10 பெண்கள்கூட தொடர்ந்து வேலை செய்யாத நிலையைப் பார்க்கிறோம். ஒரு வேளை இந்த நிலையில் நூற்பவர்கள், நெச வாளர்களின் எண்ணிக்கை அதிகமாக இருக்கிறது என்று முதலில் காட்டிவிட்டு, உற்பத்திக் குறைவாக இருக்கிறது என்றால், அதில் பயிற்சி பெற்ற ஆண்களும், பெண்களும் அதிலே தொடர்ந்து வேலை செய்யாததுதான் காரணமாக இருக்குமோ என்று சந்தேகப் படவேண்டியதாக இருக்கிறது. கதர் திட்டம் முக்கியமாகப் பெண்களுக்கு வேலை வாய்ப்புக் கொடுக்கக்கூடிய திட்டம். பரவ லான முறையில் பெண்கள் அதிலே அதிகமாக ஈடுபடலாம்.

2nd March 1961] [Srimathi Rajathi Kunchithapatham]

குறைந்த செலவிலே அவர்களுக்கு வேலை வாய்ப்பு கொடுக்கக்கூடிய ஒரு முக்கியமான தொழில் அது. அந்தத் தொழிலில் இன்னும் அதிகமான கவனம் செலுத்தப்படவேண்டும். இந்தத் திட்டத்திலே ஈடுபட்டுள்ள அதிகாரிகள் இன்னும் கவனம் செலுத்தி, ஒவ்வொரு ஜில்லாவிலும் நடக்கக்கூடிய பயிற்சி நிலையங்களை இன்னும் அதிகமாகக் கவனிக்கவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதேபோன்று பெரம்பூர் ரெயில் பெட்டி தொழிற்சாலையை ஏற்படுத்தியதன் மூலம் அரசாங்கம் ஒரு நல்ல காரியம் செய்திருக்கிறார்கள். சமீப காலத்திலே ஒரு மாதத்திற்கு முன்பு பஞ்சாயத்துத் தலைவர்கள் அத்தனை பேர்களும் ஒவ்வொரு மாவட்டத்திலிருந்தும் இங்கு வந்து பார்க்கக்கூடிய சந்தர்ப்பம் அளிக்கப்பட்டது. மற்ற மாவட்டங்களிலிருந்தும் ஏராளமான பேர்கள் வந்து பார்த்தார்கள். நெல்லையிலிருக்கும் தலைவர்களும் இந்தப் பெரம்பூர் ரயில் பெட்டித் தொழிற்சாலையை நேரில் கண்டு களித்தார்கள். பேப்பர் அளவிலே அவர்கள் படித்திருந்ததைக் கருத்து அளவிலே அவர்கள் நினைக்க முடியாத அளவிற்கு ஒரு ஆச்சரியத்தை அவர்கள் அனுபவித்தார்கள் என்று அவர்கள் பின்பு சொன்னதைக் கேட்டோம். அதேபோன்று நெய்வேலித் திட்டத்தையும் நேரில் பார்த்துவிட்டு 'எங்களுக்கு உண்மையிலேயே இவ்வளவு பெரிய திட்டம் இருக்கிறது என்று தெரியவே தெரியாதே' என்று கூறிச் சந்தோஷப்பட்டார்கள். 'பெரம்பூர் ரெயில் பெட்டித் தொழிற்சாலை நம் நாட்டில் தொழில் எப்படி வளர்கிறது என்பதை எடுத்துக் காட்டுகிறது, அவ்வளவு சந்தோஷமான நிலை எங்களுக்கு ஏற்படுகிறது, இந்த வசதியை அரசாங்கமே செய்து கொடுத்ததில் எங்களுக்குப் பயன்படக்கூடிய வகையிலே அது ஏற்பட்டது' என்று சொன்னார்கள். முதல் ஐந்தாண்டு இறுதியில் ஒரு வருஷத்திற்கு 350 பெட்டிகள் கட்ட வேண்டும் என்று திட்டம் போடப்பட்டிருந்த போதிலும், மூன்று ஆண்டுகளிலேயே இந்த இலக்கை அடைந்தாகிவிட்டது. இப்பொழுது வருஷத்திற்கு 600 பெட்டிகள் செய்யக்கூடிய நிலைமை இருக்கிறது. ஒரு தினத்திற்கு ஏறக்குறைய இரண்டு பெட்டிகள் செய்யக்கூடிய அளவிற்கு நாம் முன்னேறியிருக்கிறோம். நம் நாட்டு தொழிலாளிகளின் திறமையைப் போற்றக்கூடிய நிலைமையில், அரசாங்கத்துடன் ஒத்துழைக்கக்கூடிய தொழிலாளர்களின் திறமையினால் தொழிலில் இவ்வளவு முன்னேற்றம் அடைந்திருக்கிறோம்.

அடுத்தபடியாக, மின்சாரத்தை எடுத்துக்கொண்டு அதைப் பற்றி ஒரு வார்த்தை சொல்லாமல் இருக்க முடியாது. நம் நாட்டில் இன்று எத்தனையோ தொழில்கள் வெற்றி நடை போடுகின்றன என்றால், அதற்கு மின்சார வளர்ச்சியே காரணம். பத்து ஆண்டுகளுக்கு முன்னால் 12 யூனிட்டுகள் உபயோகப்படுத்திக் கொண்டிருந்த ஒரு நபர் இன்று 60 யூனிட்டுகள் பயன்படுத்தக்கூடிய நிலையில் மின்சாரம் ஓரளவு முன்னேறி இருக்கிறது. அந்த அளவிற்கு மின்சார சக்தி மக்களுக்குப் பயன்

[Srimathi Rajathi Kunchithapatham] [2nd March 1961]

படுகிற நிலையில் இந்த இலாகா முன்னேற்றம் அடைந்திருக்கிறது. ஏதோ வாயளவிலே, பேசு அளவிலே சொல்லுவது இல்லை என்பதை எடுத்துக்காட்டுவதற்கு இது ஒன்றே சான்று போதும். ஒவ்வொருவரும் முன்பு இருந்ததைவிட இப்பொழுது 5 பங்கு அதிகமாக மின்சாரத்தைப் பயன்படுத்துகிறார்கள். இந்த இலாகாவில் 1951-ம் ஆண்டில் ரூ. 3 கோடியாக இருந்த வருமானம் இப்பொழுது ரூ. 15 கோடியாக அதிகரித்திருக்கிறது. இன்னும் 1966-ம் ஆண்டில் இந்த வருமானம் ரூ. 40 கோடியாக அதிகரிக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது என்றும் எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. இது நாம் வரவேற்கக்கூடிய ஒரு அம்சம்.

இதேபோன்று ரோடு வசதியைப்பற்றி ஓரிரண்டு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். ரோடு அமைப்பை எடுத்துக்கொண்டால், ஏதோ ரயில்வே ரோடு மட்டும் போட்டிருக்கிறோம் என்ற பெருமை மட்டும் போதாது என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன். குறிப்பாக நெல்லையை எடுத்துக்கொண்டால் அங்கே இருக்கிற கிராம ரோடுகள் மிகவும் மோசமான நிலைமையில் சில இடங்களில் இருக்கிறது. இதேபோன்று மற்ற மாவட்டங்களிலும் இருந்து வருகிறது என்பதை அங்கத்தினர்கள் எடுத்துக் காட்டுவதை நாம் பார்க்கலாம். இதிலே கொடுக்கப்பட்டிருக்கிற பட்டியலில் தார் ரோடுதான் அதிகமாகப் போடப்பட்டிருக்கிறது. ஆரம்பத்திலே 920 மைல் நீளத்திற்குத் தார் ரோடாக இருந்தது. இப்பொழுது 7,111 மைல் நீளத்திற்குத் தார் ரோடு போடப்பட்டிருக்கிறது. இம்மாதிரி தார் போடப்பட்டிருப்பது ஒரு நல்ல அம்சம்தான். அதிலே ஒரு நல்ல முன்னேற்றத்தைக் காண்கிறோம். ஆனால் கப்பி போட வேண்டிய ரோடுகள், இன்னும் 'எர்த் வொர்க்' பார்க்க வேண்டிய ரோடுகள் அதிகமாக இருக்கிறது. இதை அதிகாரிகளின் கவனத்திற்குக் கொண்டு வந்தாலும், ஒன்று இல்லாவிட்டால் இன்னொரு காரணத்தைச் சொல்லி சால்ஜாப்பு சொல்லிவிடக்கூடிய நிலைமைதான் இருந்துகொண்டு வருகிறது. ஜில்லா போர்டு ரோடாக இருந்தால் அதை அரசாங்கமே எடுத்துக்கொள்ளவேண்டும். அல்லது அதை இனிமேல் பஞ்சாயத்துக்கள் எடுத்துக் கொள்ளுவது என்றால், அதைப் பஞ்சாயத்து யூனியன் கவனிக்க வேண்டும். சூபரிண்டெண்டிங் என்ஜினியரிடமிருந்து, என்ன செய்யப் போகிறார்கள், ரோடு ரோடாகப் போகிறதா, இல்லையா என்பதற்குப் பதிலே கிடையாது. கப்பி போடவேண்டிய ரோடுகள் எத்தனையோ இருக்கின்றன. மண் வேலை செய்யக்கூடிய சாலைகள் எத்தனையோ இருக்கின்றன. இம்மாதிரி விவசாயத்தைப் பெருக்கி மின்சாரத்தைப் பெருக்கி, கிராமங்களில் உள்ள மக்களுக்குப் பஸ் வசதி செய்துகொடுக்கிறோம் என்று அவர்களுக்கு நம்பிக்கை ஊட்டிவிட்டு, ரோடுகளில் பஸ்கள் போகாவிட்டாலும், கால் நடையாகப் போகக்கூட கஷ்டமாக இருக்கும் நிலையில் சாலைகள் வைக்கப்பட்டிருந்தால், அது மிகவும் வருந்தத்தக்கது. ரோடு பராமரிப்புக்கு அவர்கள் ஒதுக்கியிருக்கிற தொகை போதவே போதாது, இன்னும் அதை ஆதரிக்கவேண்டும் என்று கேட்டுக்

2nd March 1961] [Srimathi Rajathi Kunchithapatham]

கொள்ளுகிறேன். 'எர்த் வொர்க்' பார்க்கப்பட்ட சாலைகளின் முன்பு 7,131 மைல் நீளமாக இருந்தது இப்பொழுது 7,305 மைல் நீளமாகத் தான் இருக்கிறது. அதேபோன்று கப்பி போடப்பட்ட சாலைகள் முன்பு 12,953 மைல் நீளமாக இருந்தது இப்பொழுது 11,143 மைல் நீளமாக இருக்கிறது. இப்பொழுது 1,000 மைல் குறைந்திருக்கிறது. தார் ரோடு அதிகமாக அவசியம் இல்லை. நகர்ப்புறங்களில் தார் ரோடு, காங்கிரீட் ரோடு மிகவும் அவசிய மில்லாவிட்டாலும், அவர்கள் சௌகரியமாக இருப்பவர்கள், கஷ்டப்படவேண்டிய நிலை அவர்களுக்கு இல்லை. ஆனால், முக்கிய மாக கிராமப் பகுதிகளிலே உற்பத்தி செய்யக்கூடிய பொருள்கள் நகர்ப்புறங்களுக்கு வரவேண்டிய நிலையில், கிராமங்களில் போக்கு வரத்திற்கு நல்ல வசதி செய்துகொடுக்கப்பட்டால்தான், மக்க ளுக்கு ஒரு சந்தோஷமான நிலைமை ஏற்படும். ஆகவே, கிராமப் புறங்களில் ரோடு வசதிகள் நன்றாகச் செய்துகொடுக்கவேண்டும் என்று பணிவோடு கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, நிதி அறிக்கையிலே வரவேற்கத்தக்க அம்சம் கல்வி. குறிப்பாக, 11-வது வகுப்புவரை எல்லா ஏழை மாணவர் களுக்கும் இலவசக் கல்வி கொடுப்பதென அரசாங்கம் முடிவு செய்துள்ளது வரவேற்கத்தக்கது. அதோடுகூட ஆசிரியர் களுக்கும் சம்பள உயர்வு கொடுத்திருக்கிறோம். மன நிம்மதியுடன் அவர்கள் பள்ளிகளில் வேலை செய்யவேண்டுமென்று அதிகச் சம்பளம் கொடுத்து வருகிறோம். அதே சமயத்தில் நான் ஒன்று கூற விரும்புகிறேன். ஆசிரியர்களும் அதே மனோபாவத்துடன், அரசாங்கம் எந்த அரசாங்கமாக இருந்தாலும்—ஒவ்வொரு கட்சி அரசாங்கம் ஒவ்வொரு நிலையிலே வரலாம்—ஆசிரியர்கள் கவலைப் படவேண்டியது இல்லை. அவர்கள் மாணவர்களுக்குப் போதிக்கும் பொழுது, இன்று அவர்களுடைய மனதை எவ்வளவு திருப்தி படுத்த வேண்டுமோ அவ்வளவு திருப்திபடுத்த, இந்த அரசாங்கம் அவர்களுக்கு வேண்டிய திட்டங்களை நிறைவேற்றி வரும்பொழுது அரசாங்கத்தைப் பற்றித் தூற்றுமலாவது ஆசிரியர்கள் இருக்கவேண்டுமென்ற மனப்பான்மையை இந்த அரசாங்கம் அவர்களுக்கு அறிவுறுத்தவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். என்னுடைய அனுபவத்திலிருந்து சொல்லுகிறேன். பள்ளிக்குச் சென்று வருகிற மாணவர்கள்—கல்லூரியாக இருந்தாலும் சரி, உயர்நிலைப் பள்ளியாக இருந்தாலும் சரி—இன்றைக்கு லெக்சருக்கு வந்திருந்த ஆசிரியர் கள், பேராசிரியர்கள் என்னென்ன பேசினார்கள், எந்தெந்த அமைச்சர்களைத் தூற்றினார்கள், எந்தெந்தத் தலைவர்களைப் போற்றினார்கள், ஏற்றினார்கள் என்று சொல்லக்கூடிய ஒரு நிலைமை மாறவேண்டும். கல்லூரிகளிலும், பள்ளிகளிலும் மாணவர்களுக்கு விஷத்தைப் போதிக்கக் கூடாது. விஷயத்தைச் சொல்ல வேண்டும். ஆசிரியர்களுக்குத் திருப்தி அளிக்கக்கூடிய வகையிலே செய்திருக்கிறோம். முக்கியமாக ஜில்லா போர்டு பஞ்சாயத்து யூனியன்களிலே வேலைபார்க்கும் ஆரம்ப ஆசிரியர்களுக்கு வீடு கட்டும் திட்டம் கிடையாது. நகரசபை ஆட்சியில் இருக்கும்

[Srimathi Rajathi Kunjithapatham] [2nd March 1961

பள்ளிகளிலே பணியாற்றுகிற ஆசிரியர்களுக்கு வீட்டு அலவன்ஸ் கொடுக்கிறோம். ஜில்லா போர்டு, பஞ்சாயத்து யூனியனில் இருக்கக்கூடிய ஆசிரியர்களுக்கு வீட்டு அலவன்ஸ் கொடுக்கப் படுவதில்லை. அவர்களுக்கும் இந்த அலவன்ஸ் கொடுக்கவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன். மக்களிடம் அதிருப்தியை ஏற்படுத்தக்கூடிய ஒரு நிலை விற்பனை வரியிலே இருந்தது. ரூ. 25,000 வரை விற்பனை செய்பவர்களுக்கு விரிவான கணக்கு வைக்காமல் உத்தேச மதிப்பின் பேரில் மொத்தமாக வரி செலுத்தக் கூடிய சலுகை ஒன்றைக் கொடுத்திருந்தோம். இதை 50,000 ரூபாயாக இப்பொழுது உயர்த்தி எதிர்த் தரப்பிலே இருப்பவர்களுக்கு அதிக வேலையில்லாமல் செய்துவிட்ட அமைச் சரைப் பாராட்டி, இந்த நிதி நிலை அறிக்கையை முழு மனதுடன் வரவேற்று, என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன்.

* **SRI A. V. P. ASAITHAMBI** : தலைவர் அவர்களே, இந்த ஆண்டு 2.85 கோடி ரூபாய் துண்டு விழுகிற ஒரு பட்ஜெட்டை அமைச்சர் அவர்கள் இந்த மன்றத்திலே கொண்டுவந்திருக் கிறார்கள். பொதுவாக, நகர சபை போன்ற நிர்வாக ஸ்தாபனங் களிலே வரவு செலவு அறிக்கைகளைத் தயாரிக்கும்பொழுது, துண்டு விழுகிற ஒரு நிலைமையைக் காட்டுவார்கள். அதற்குக் காரணம் நகரசபை என்கிற ஸ்தாபனம் மேலே இருக்கிற அரசாங் கத்திலே மேலும் மேலும் உதவித் தொகை பெறுவதற்கு வேண்டி, தங்கள் இடத்தை அபிவிருத்தி செய்கிற அடிப்படையிலே, துண்டு விழுகிறதைக் காட்டி கடன் பெறுவதை நாம் பார்த்திருக்கிறோம். நம்முடைய அரசாங்கம் நம்முடைய நாடு அபிவிருத்தி அடையக் கூடிய நிலையிலே துண்டு விழுகிற தொகையை இன்றைய தினம் மிகக் குறைந்த அளவிலே காட்டியிருப்பதைப் பார்க்கிறபொழுது, இந்த அரசாங்கம் நம்முடைய நாட்டுக்குத் தேவையான பல அபிவிருத்திகளைக் கணக்கிட்டு அவற்றைச் செய்வதற்குத் திட்ட மிடத் தவறியிருக்கிறது என்பதை நாம் உணர முடியும். நம் முடைய நாடு மிகவும் பின்தங்கிய நிலைமையிலே இருக்கிறபொழுது துண்டு விழும் தொகை மிகக் குறைவாக இருக்கிறது என்று சொன்னால், உள்ளபடியே, நம்முடைய அரசாங்கம் சரிவர என் னென்ன தேவைகள் என்பதைக் கணக்கிட்டுப் போடாத ஒரு நிலைமையைத்தான் நாம் குறிப்பிட்டுச் சொல்ல முடியும்.

இரண்டாவதாக, இந்தத் துண்டு விழுகிற தொகையைச் சரிக் கட்டக்கூடிய அளவுக்கு மத்திய சர்க்காரிடமிருந்து உதவித் தொகையை எதிர்பார்க்கக்கூடிய அளவுக்கு ஒரு நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்பதைச் சொல்ல வேண்டியிருக்கிறது. கடந்த ஆண்டு பட்ஜெட்டிலே குறிப்பிட்டதற்கு மேலாக நமக்குக் கொஞ்சம் உபரியாகக் கிடைத்ததற்குக் காரணம், மத்திய அரசாங் கத்திடமிருந்து உதவி அதிகமாகக் கிடைத்ததுதான் என்று அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். உள்ளபடியே நம்முடைய மாகாண அரசு இன்னொரு இடத்திலேயிருந்து தொகையை எதிர்பார்க்கக்கூடிய அளவுக்கு, நகரசபை போன்று

2nd March 1961] [Sri A. V. P. Asaithambi.]

ஒரு சாதாரண நிர்வாக உறுப்பு மன்றம் மாதிரி இருக்கிறது என்பது இந்த அறிக்கையிலிருந்து தெளிவாகிறது. பொதுவாக, எந்த நாட்டிலேயும் இரண்டு பட்ஜெட்டுகள் இருப்பதைப் பார்க்க முடியாது. ஆனால் நாமெல்லோரும் பார்க்கிறோம், இங்கே நிதி அமைச்சர் கனம் சுப்பிரமணியம் அவர்கள் பட்ஜெட்டும், அங்கே மொரார்ஜி தேசாய் பட்ஜெட்டும், ஆக இரண்டு பட்ஜெட்டுகள் இந்த நாட்டு மக்களைப் பொறுத்தவரையில் வெளிவந்திருக்கின்றன. ஒரு நாட்டைப் பொறுத்தவரையில் ஒரு பட்ஜெட்தான் இருக்க முடியுமே தவிர, இரண்டு பட்ஜெட்டுகள் இருக்க முடியாது. (குறுக்கீடு : ஏன்?) என்னுடைய கருத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன். அமைச்சர் அவர்கள் அப்புறம் பதில் சொல்லலாம்.

THE HON. SRI R. VENKATARAMAN : பெடரல் கான்ஸ்டிடியூஷன், யூனிடரி கான்ஸ்டிடியூஷன் என்று இரண்டு உண்டு. யூனிடரி கான்ஸ்டிடியூஷனிலே ஒரே பட்ஜெட். பெடரல் கான்ஸ்டிடியூஷனிலே எத்தனை யூனிட்டுகள் இருக்கின்றனவோ அத்தனை பட்ஜெட்டுகள் இருக்கும்; சென்டிரல் பட்ஜெட்டும் இருக்கும்.

SRI A. V. P. ASAITHAMBI : இரண்டு வெவ்வேறு நாடுகள், அதாவது ஒரு நாடு இன்னொரு நாட்டுக்கு அடிமையாக இருப்பதன் அறிகுறியாகத் தான் இரண்டு பட்ஜெட்டுகள் வரக்கூடிய நிலைமை இருக்கும். இந்த அளவிலே, இந்த நாடு இன்னொரு பகுதிக்குச் சட்டபூர்வமாக அடக்கி வைக்கப்பட்டிருப்பதன் அறிகுறியாகத் தான் இரண்டு பட்ஜெட்டுகள் இந்த நாட்டு மக்களைப் பாதிக்கக் கூடிய அளவுக்கு வந்திருக்கின்றன. இந்த பட்ஜெட்டைப் பொறுத்த வரையிலே வரி விதிப்பு எதுவும் இல்லை என்று அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆனால் மத்திய அரசினர் வெளியிட்ட பட்ஜெட்டிலே, இந்த நாட்டு சாதாரண மக்களைப் பாதிக்கக்கூடிய அளவுக்குச் சுமார் 41 இனங்கள் மீது வரி விதிக்கப்பட்டிருக்கிறது. 41 இனங்கள் மீது வரி விதிக்கப்பட்டு, இந்த நாட்டு மக்கள் அந்த வரியைச் செலுத்தவேண்டியிருக்கிறது.

TEMPORARY CHAIRMAN (SRI V. K. KRISHNAMURTHY) : The hon. Member is requested to speak on the subject under discussion and not refer to the Central Budget.

12 noon.

SRI A. V. P. ASAITHAMBI : இரண்டு அரசாங்கமும் ஒன்றோடொன்று இணைந்திருக்கின்றன. ஆகவே அந்த பட்ஜெட்டையும், இந்த பட்ஜெட்டையும் சேர்த்துப் பேசுவதில் தவறு ஒன்றும் இல்லையென்று நான் கருதுகிறேன். அங்கே 41 இனங்கள்மீது வரி விதிக்கப்பட்டிருக்கிற காரணத்தினாலேதான் இங்கே மேற்கொண்டு வரி விதிக்காதபடி இருக்கிறதே தவிர, உள்ளபடியே இன்றைய தினம் இந்த நாட்டு மக்கள் மீது அதிகப்படியான வரிகள் சுமத்தப்பட்டு வருகிறதை நாம் பார்க்கலாம். மேலும், இது கடைசி பட்ஜெட் என்றும், இது தேர்தல் அறிக்கையைப் போன்று இருக்கிறது

பட்ஜெட் மாதிரி இல்லை என்றும் எதிர்க் கட்சி அங்கத்தினர்கள் குறிப்பிட்டதை வைத்துக்கொண்டு எந்த அளவுக்குத் தேர்தல் அறிக்கையாக இருக்கிறது என்று சொன்னால், தேர்தல் அறிக்கை என்று ஒரு கட்சி செய்த சாதனைகளை விளக்கக்கூடியதாக இருக்குமோ, அவ்விதம் இது நல்ல அளவுக்கு சாதனைகளை விளக்கக்கூடியதுதானே என்று எதிர்க்கட்சியினர் பேசினார்கள். தேர்தல் அறிக்கையிலே செய்யாததையும், செய்ய முடியாததையும் செய்தது போன்று காட்டக்கூடிய அளவிலே பல கட்சிகள் செய்வதை நாட்டிலே பார்க்கலாம். அந்த அளவிலே பார்க்கும் போது கடந்த ஆண்டில் இந்த நாட்டில் காங்கிரஸ் என்னென்ன செய்திருக்கிறது என்பதையும் பெரிய அளவில் என்னென்ன செய்திருக்கிறார்கள் என்பதையும் மக்களுக்குத் தெரிவிக்கும் அளவில் இந்த பட்ஜெட்டில் காட்டியிருக்கலாம். கடந்த நான்கு ஆண்டு காலமாக இந்த அரசாங்கம் செய்த சாதனைகளால் மக்களுடைய நிலைமை எந்த அளவுக்கு உயர்ந்து இருக்கிறது என்பதை நாம் பார்க்க வேண்டும். உற்பத்தி அதிகமாகி இருக்கிறது என்பதை கனம் அமைச்சர் அவர்கள் புள்ளி விவரங்களுடன் வருடா வருடம் வேண்டிய கணக்கை பட்ஜெட்டில் குறிப்பிட்டிருக்கிறார். எந்த அளவுக்கு உற்பத்தி அதிகரித்திருக்கிறதோ அந்த அளவுக்கு விலைவாசிகள் கூடிக் கொண்டே தானிருக்கிறது. வதைத் தான் பார்க்கிறோமே தவிர உற்பத்தி அதிகரிக்க அதிகரிக்க விலைவாசிகள் ஓரளவு குறைந்திருக்கிறதா என்கிற நிலைமையை நாம் பார்க்கிறோமா என்று சொன்னால் இல்லை. உற்பத்தி அதிகரித்திருக்கிறது என்று காட்டியிருக்கிற கனம் அமைச்சர் அவர்கள் விலைவாசிகளை குறைப்பதற்கு அல்லது விலைவாசி கூடியிருப்பதற்கு உள்ள காரணம் என்ன? அதைத் தவிர்க்கக்கூடிய நிலைமையை அவர்கள் விளக்கவில்லை. என்ன தான் அவர் விளக்கிச் சொன்ன போதிலும் கூட விலைவாசியைக் கட்டுப்படுத்த முடியாத நிலைமையில் அதிகரிக்கப்படுகிற உற்பத்தியால் இந் நாட்டிற்கு என்ன பயன், அதனால் மக்கள் என்ன பலனை அனுபவிக்கிறார்கள். இவைகளையெல்லாம் நாம் பார்க்கிறபோது உற்பத்தியைக் காட்டி, அதைக் காண்பிப்பதன் மூலமாக இந்த ஆட்சியின் சாதனை எவ்வளவு கூடி இருக்கிறது என்று காட்டுவதன் மூலமாக மக்களை ஏமாற்றக்கூடிய அளவில் முயற்சிக்கப்படுகிறது. இப்படி விலைவாசிகள் கூடியிருப்பதைக் காட்டும்போது அவற்றை எதிர்க் கட்சி எடுத்துச் சொல்லும் போது நிச்சயமாக அரசாங்கத்தினுடைய சாதனை அவ்வாறு இல்லை என்பதை மக்கள் நிச்சயமாக உணரத்தான் போகிறார்கள்.

அது மட்டுமல்ல, இந்த பட்ஜெட்டைப் பொறுத்த வரையில் மத்திய அரசாங்கத்தின் தயவினால் தாம் எதிர் பார்த்த அளவுக்கு அதிகமாகவே பணம் வந்து விட்டது என்று கனம் அமைச்சர் அவர் கூறியிருக்கிறார். அதற்கு அடுத்த பக்கத்திலேயே பார்த்தால் இந்தச் சம்பளங்களைச் சரிக்கட்டுவதற்காக அளிக்கப்படுகிற பணம் இந்த ஆண்டுடன் நிறுத்தப்பட்டு விட்டது, மேலும் தொடர்ந்து கொடுக்க மறுத்து விட்டார்கள் என்று குறிப்பிட்டிருப்பதை நாம் பார்க்கிறோம். மத்திய அரசாங்கத்தினிடம் இந்த

2nd March 1961] [Sri A. V. P. Asaithambi]

அரசாங்கம் கேட்ட ஒவ்வொரு விவரத்திற்கும் அவர்கள் அவைகளை மறுக்கப்பட்ட தன்மைக்கும் மேலும் மேலும் நாம் பணிந்து கொடுத்துக்கொண்டு போகக்கூடிய அளவில் தான் இருக்கிறது. கோரிக்கைகளை வைத்து அதே இடத்தில் அவற்றை அவர்கள் வற்புறுத்தியதாகத் தெரியவில்லை. உதாரணமாகச் சேலத்தில் கிடைக்கக்கூடிய இரும்பைப் பயன்படுத்தக்கூடிய அளவில் ஒரு தொழிற்சாலையை அங்கே ஏற்படுத்த வேண்டுமென்கிற கோரிக்கை வெகு நாட்களுக்கு முன்னதாகவே இந்நாட்டில் எல்லாக் கட்சிகளாலும் வற்புறுத்தப்பட்டு வருகிறது. அதைப்பற்றி இந்த பட்ஜெட்டில் உறுதி அளிக்கப்பட்டிருக்கிறதா என்று பார்த்தால் அது நிச்சயமாக இல்லை. ஏதோ சோதனைக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. அது வந்த பிறகுதான் அது பூர்த்தி செய்யலாம் என்கின்ற முறையில் அது இருக்கிறதே தவிர அது நிச்சயமாக இங்கே ஏற்படுத்தப் படும் என்கிற தன்மையில் அதற்குள்ள வாக்குறுதி இல்லை. இந்த அளவில் இங்கே இருக்கக்கூடிய இந்த பாநில அமைச்சர்கள் இப்படியே ஒவ்வொரு விஷயத்திலும் அவர்களைத் தைர்யமாக அணுகி நமக்கு என்ன வேண்டும் என்பதைக் கேட்பதை விட்டு விட்டு அதற்கு மாறாக வரலாம் என்கிற தோரணையில் மாத்திரம் அவர்கள் இருக்கிறார்கள் என்று சொன்னால் இந்த ராஜ்யத்தை முன்னுக்குக் கொண்டு வருவதற்கு இந்த அரசாங்கம் தவறி விட்டார்கள் என்கிற குற்றச்சாட்டை நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். சுதந்திரம் அடைந்து இந்தப் பதிமூன்று ஆண்டு காலத்தில் நம்முடைய நாடு, உலகத்திலுள்ள இதர நாடுகள் அடைந்த முன்னேற்றத்தைப் பார்க்கும்போது, இந்த நாடு எந்த அளவில் முன்னேற்ற மடைந்திருக்கிறது என்று சொன்னால் நிச்சயமாகச் சொல்லலாம் இந்த நாட்டைப் பொறுத்த வரையில் போதிய அளவில் முன்னேற்றமடையவில்லை என்று. அதற்குக் காரணம் நம்முடைய நாடு அதிலும் நமது தமிழகம் சென்னை ராஜ்யம், ஒரு நகர சபையைப்போல, ஒரு கார்ப்போரேஷனைப்போல இருக்கிறதே தவிர இதற்குப் போதிய அதிகாரம், சுதந்திரம் முதலியவைகள் இந்த நாட்டை பொறுத்த வரையில் இல்லை. இந்த பட்ஜெட்டைச் சமர்ப்பித்த கனம் அமைச்சருக்குச் சொல்லுகிறேன் இந்த ராஜ்யத்திலிருந்து மத்திய அரசாங்கத்திற்கு வரியாக செல்லக்கூடிய தொகை மொத்தத்தில் எவ்வளவு? அதாவது ரயில் மூலமாகவும், தபால் மூலமாகவும், மற்ற வரி இனங்கள் மூலமாகவும் மத்திய அரசாங்கத்திற்குச் செல்லக்கூடிய தொகைகள் வருடா வருடம் எவ்வளவு? நாம் மத்திய அரசாங்கத்தினிடமிருந்து பெறக்கூடிய தொகை எவ்வளவு? யார் எவ்வளவு அதிகமாக அனுபவிக்கிறார்கள், அவர்கள் அனுபவிக்கிறார்களா அல்லது நாம் அனுபவிக்கிறோமா என்கிற புள்ளி விவரங்களைக்கூட காட்டவில்லை. மத்திய அரசாங்கம்தான் அதிகமாக அனுபவிக்கிறார்கள் என்பதை எடுத்துக்காட்ட முடியும். அதனால் தான் இந்த நாடு புறக்கணிக்கப்படுகிறது என்று சொல்லுகிறோம். நாங்கள் மாத்திரம் சொல்லவில்லை. மைசூர் அரசாங்கக் காங்கிரஸ் உறுப்பினர்கூட நேற்று முன் தினம் பாராளுமன்றத்தில் அதை

எடுத்துப் பேசியிருக்கிறார். அவ்விதமே தென்னாடு புறக்கணிக்கப் படுகிறது என்று கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த திரு. கே. டி. கே. தங்கமணி கூடப் பேசியிருக்கிறார். ராஜ்ய கவர்னர்கள் மாநாட்டில் கூட இவைப்பற்றி பேசப்பட்டிருக்கிறது. தொழில் அமைச்சர் கனம் வெங்கட்டராமன் அவர்கள்கூட எடுத்துச் சொல்லி இருக்கிறார். அதற்கு திரு. பண்டித நேருவுக்குக் கோபம் வந்ததே தவிர வேறு ஒன்றுமில்லை. ஆகவே தென்னாடு எந்த வழிகளிலும் புறக்கணிக்கப்படுகிறது என்கிற நிலைமை இருக்கிறது. அதற்கு இந்த அரசாங்கம் வேண்டிய நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும். இந்த அரசாங்கத்திற்கு என்ன தேவை அதைக் கட்டாயம் செய்ய வேண்டும் என்று இந்த அரசாங்கம் அவர்களை வற்புறுத்த வேண்டும். இன்னும் சொல்லப் போனால் ஏற்றுமதி, இறக்குமதி என்பதை மத்திய அரசாங்கம் கையில் வைத்துக்கொண்டு அகில இந்தியா பூராவும் ஒரே மாதிரிக் கொள்கையை வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அதில் நம்முடைய தேவை என்ன, நமக்கு எவ்வளவு அதன் மூலம் வரவேண்டும், எந்த அளவுக்கு அந்தக் கட்டுப்பாடு இருக்க வேண்டும், எந்த அளவுக்கு நமக்கு ஏற்றுமதி இறக்குமதி வருமானம் இருக்க வேண்டும் என்பதையெல்லாம் ஆராய்ந்து பார்க்க வேண்டும். எந்த அளவுக்கு இங்குள்ள அமைச்சர்கள் சண்டை போட்டு அவற்றைப் பெற முடியும் என்பதைப் பார்க்க வேண்டும். ஐந்தாண்டுத் திட்டத்திற்குப் பணம் வாங்குவதற்கு என்று இங்கிருந்து மூன்று அமைச்சர்கள் போனார்கள். அங்கு 100 கோடி ரூபாயைக் குறைத்தார்கள் என்று சொல்லுகிறார்கள். அப்படி இல்லாமல் நாம் கேட்பதை அவர்கள் கொடுக்கும் அளவில் அவர்களை வற்புறுத்த வேண்டும். அப்படி வற்புறுத்த முடியவில்லை என்று அவர்கள் திரும்பி வந்து விட்டார்கள். இதை நினைக்கும்போது இந்நாட்டை அவர்கள் எந்த அளவு காப்பாற்ற முடியும் என்பதைப் பார்க்க வேண்டும். மேற்கொண்டு சண்டை போட்டு வாங்கக்கூடிய அளவில் அங்கு வற்புறுத்தியிருக்க வேண்டும். இங்குள்ள கோரிக்கைகளை அங்கே வைத்துச் சண்டை போட்டு வாங்க வேண்டும். இந்த ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் இந்நாட்டு மக்கள் எந்த அளவுக்கு முன்னேற்றமடைந்திருக்கிறார்கள் என்று பார்க்கும்போது போதிய அளவில் முன்னேற்றமடையவில்லை. ஆனால் மின்சார அமைச்சர் சொல்லலாம் எல்லா இடங்களுக்கும் மின்சாரம் வழங்கப்பட்டிருக்கிறது என்பது வாஸ்தவம்தான். ஆனால் எந்த அளவுக்குத் தொழில் துறையில் வழங்கப்பட்டிருக்கிறது? தூத்துக்குடி துறைமுகத்தை அபிவிருத்தித் திட்டத்தில் சேர்த்திருப்பதாகச் சொல்லப் பட்டிருக்கிறதே தவிர அது எந்த அளவுக்கு இன்றைக்கு ஆரம்பிக்கப்படும் என்பது இன்னும் தெரியவில்லை. இங்கே இருக்கக் கூடிய அமைச்சர்கள் இங்குள்ள திட்டங்களை திட்ட வட்டமாக எடுத்துச் சொல்லி அதற்கு வேண்டிய உதவியை வாங்கி வரவேண்டும். அந்த முறையில் இந்நாட்டின் முன்னேற்றத்திற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டுமே

2nd March 1961] [Sri A. V. P. Asaithambi]

தவிர வெற்றிகரமாக பட்ஜெட்டை சமர்ப்பித்து விட்டோம் என்று சொல்வதில் பயன் இல்லை. எவ்வளவு காரியங்களைச் செய்து விட்டோம் என்பதை வரவு செலவு திட்டத்தில் சொல்வதன் மூலமாக இந்த அரசாங்கம் இருந்தால் இந்த நாட்டிற்கு நன்மையை அவர்கள் செய்தவர்களாக மாட்டார்கள். நிச்சயமாக நான் சொல்லுகிறேன், இந்த அரசாங்கம் இந்த ஐந்து வருடகாலத்தில் செய்திருக்கிற சாதனங்களைக் கணக்கிட்டுப் பார்த்தால் நிச்சயமாகச் சொல்லுவேன், சாதாரணமாக ஒரு கார்போரேஷன், ஒரு முனிசிபாலிட்டி தங்களுக்குள்ள மக்களுக்கு சிறு ஊர்களைத் திருத்தக்கூடிய அளவுக்குத்தான் இந்த அரசாங்கம் செய்திருக்கிறதே தவிர சுதந்தர நாடு செய்யக்கூடிய அளவில் செய்யவில்லை. இந்தச் சர்க்கார் அந்த அளவில் தங்களுடைய சாதனைகளைச் செய்யவில்லை. அப்படிச் செய்யவும் தவறி விட்டார்கள் என்பதைக் கூறிக்கொண்டு இந்த பட்ஜெட் சுதந்தர நாட்டினுடைய பட்ஜெட் அல்ல, இது ஒரு அடிமை அரசாங்கத்தினுடைய பட்ஜெட்டாக இருக்கிறது என்பதைக் கூறிக்கொண்டு என் உரையை இத்துடன் முடித்துக்கொள்கிறேன்.

* **Sri A. CHIDAMBARANATHA NADAR**: கனம் தலைவர் அவர்களே, திறமை மிக்க நமது கனம் நிதி அமைச்சர் அவர்கள் கொண்டு வந்த இந்த வரவு செலவுத் திட்டத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகளைப் பேசலாம் என்று ஆசைப்படுகிறேன். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதி ஆண்டினுடையவும், கனம் நிதி மந்திரி கூறியது போல இந்த மந்திரி சபையின் கடைசி ஆண்டினுடையவும் பட்ஜெட்டை கனம் மந்திரி அவர்கள் சமர்ப்பித்துள்ளார்கள். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கடைசி பட்ஜெட்டாகையால் மந்திரி சபையினுடைய கடைசி பட்ஜெட்டாகையால் நல்ல முறையில், பல சிக்கல்கள் இருந்த போதிலும் எவ்வளவோ பற்றுக்குறை இருந்த போதிலும் நல்ல முறையில் கொண்டு வந்திருக்கிறார். நாம் எல்லோரும் அதற்கு ஆதரவு அளித்து அவர் கொண்டு வந்ததை ஆதரித்து ஒரு சில வார்த்தைகளை நான் பேசினால் அது ஒரு நாளும் மிகையாகாது.

அடுத்தபடியாக கனம் அமைச்சர் அவர்கள் கூறியது போல நமது மாநிலத்தில் விவசாய வளர்ச்சி மிகவும் முன்னேறி இருக்கிறது. எனினும் ரசாயன உரங்கள் குறிப்பாக எங்கள் மாவட்டத்தில் போதுமான அளவு கிடைப்பதில்லை. கழிந்த சாகுபடி காலத்தில் எங்கள் மாவட்ட விவசாயிகள் இராசயன உரம் இல்லாமல் தவித்தார்கள். இதை நமது மாநில சர்க்காரும் நல்ல முறையில் அறிந்ததே. இதை நிவர்த்தி செய்வதற்கு நெய்வேலியிலும், தூத்துக்குடியிலும் உரத் தொழிற்சாலை வருவது கண்டு மன மகிழ்ச்சியடைகிறேன். மேற்சொன்ன உர ஆலைகள் உற்பத்தி செய்யும் வரை, நமது தமிழ் நாட்டிற்குக் காலா காலத்தில் மத்திய அரசாங்கத்திடம் இருந்து தேவையான அளவு உரம் வாங்கி விநியோகிக்க வேண்டுகிறேன்.

எங்கள் மாவட்டத்தில் இப்போது நிறுவியிருக்கும் சில வாய்க் கால்களை நீட்டுவதற்காக அரசாங்கம் திட்டமிட்டிருக்கிறது. அவைகளில் அத்திக்கடை சானல், சம்பக்குளம் சானல், தெங்கம் புதூர் சானல், முட்டம் சானல் முதலியன ஆகும். இந்த வாய்க் கால்களை நீட்டும்போது காவேரி டெல்டாவை மனதில் வைத்துக் கொண்டு இப்போது சானல்களில் இருக்கும் மடையை சுருக்கிக் கொண்டு போனுல் அது அபாயகரமாக ஆகும். அது அபாயம் என்பதை அநுபவத்தில் கண்டு கொண்டிருக்கிறோம். காரணம் என்னவென்றுல் எங்கள் மாவட்டத்திலுள்ள நிலங்களுக்குத் தினமும் தண்ணீர் விடவேண்டும். அங்குள்ள மண்ணின் தன்மை அது. போதிய அளவுத் தண்ணீர் இல்லாவிட்டால் கரையான் பயிர்களை அழித்துவிடும். எனவே இதை வெற்றிகரமாகச் செய்ய வேண்டுமானுல் இப்போது நிலவி வரும் கோதையாறு அணைக் கட்டை உயர்த்தியும், புதிதாக மாம்பழத்துறையார், பொய்கை சிற்றூர் 1—2 அணைக்கட்டுகளைக் கட்டி முடிக்க அரசாங்கம் முயற் சிக்க வேண்டும்.

தொழில்துறையில் நமது மாநிலம் மற்ற மாநிலங்களைவிட முன் நோக்கி நிற்கிறது என்பதைக் கேட்டு மிக மகிழ்ச்சி அடைகிறேன். இதற்காக அரசாங்கத்தையும் பாராட்டுகிறேன். நெய்வேலித் திட்டத்தை விரைவாக முடித்து, சேலம் இரும்புத் தொழிற் சாலையை வெகு சீக்கிரமாக ஆரம்பிக்க அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன். எனது மாவட்டம் தொழில் துறையிலும், வியாபாரத் துறையிலும் பின்னணியில் நிற்கிறது. அரசாங்கம் அங்கு ரப்பர் தொழிற்சாலையையோ அல்லது டயர் தொழிற் சாலையையோ நிறுவ வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். எங்கள் மாவட்டத்தில் நிறையக் காடுகள் இருப்பதால் ஒரு பேப்பர் தொழிற்சாலையை எளிதில் ஆரம்பிக்கலாம். இதை ஆரம் பித்தால் குறைந்த சம்பளத்தில் நிறைய ஆட்களும் கிடைக்கும். மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நெல்லை, கன்னியாகுமரி ரயில் பாதையை மக்கள் ஆவலோடு எதிர்பார்க்கின்றனர். இக் குறையை நிவர்த்திக்க நமது அரசாங்கம் மத்திய அரசாங்கத்தை வற்புறுத்த வேண்டுகிறேன்.

கல்வித் துறையில் நமது மாநில முன்னேற்றம் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டிருக்கிறது. இது நான் சொல்லாமலே உங்களுக்கு விளங்கும். நமது முதல் அமைச்சர் தலைமையில் இருக்கும் அரசாங்கம் ஏழை மக்களுக்குக் கல்வி புகட்டுவதில் தீவிர முயற்சி எடுப்பதை இச்சபை மனமகிழ்ச்சியோடு பாராட்டு கின்றது. 11-வது வகுப்பு வரை ஏழை மாணவர்களுக்கு இலவசக் கல்வி அளிப்பதற்கு நமது சர்க்கார், இந்தியாவில் உள்ள எல்லா மாநிலத்தையும்விட முதலாவதாக வந்ததற்காக அரசாங்கத்தைப் பாராட்டுகிறேன். அதற்காக நமது மாநில அரசாங்கத்தையும், குறிப்பாக முதலமைச்சரையும், கல்வி அமைச்சரையும் பெரிதும் பாராட்டுகிறேன்.

2nd March 1961] [A. Chidambaranatha Nadar]

நாகர்கோயில் நகரசபையில் விஸ்தரிக்கப்பட்ட இடங்களைச் சேர்த்து பல ஆண்டுகள் கழிந்துவிட்டன. எனினும் அவர்களுக்கு நகரசபையில் உள்ள ஒருவிதமான உரிமையும், பலனும் அளிக்கப் படவில்லை. குறிப்பாகக் குடிதண்ணீர் வசதி இல்லாமல் இருந்தது. விஸ்தரிக்கப்பட்ட இடங்களிலுள்ள கிணறுகள் 120 அடி முதல் 150 அடி வரை ஆழம் உண்டு. ஆகவே அங்கு குடியிருக்கும் மக்களுடைய கஷ்டங்களை உணர்ந்து நமது காருண்ய மாநில சர்க்கார் முன்வந்து ஒரு பெருந்தொகையைக் குடிதண்ணீர் திட்டத்திற்காக ஒதுக்கியிருக்கிறது. இதைக்கண்டு அந்தத் தொகுதி பிரதிநிதி என்ற நிலையில் பெரிதும் மனம் மகிழ்கிறேன். அரசாங்கத்தை வாயார வாழ்த்துகிறேன். இத்திட்டத்தை இந்த நிதி ஆண்டிலேயே அமுல் நடத்தும்படியும், அதற்கு வேண்டிய எல்லா நடவடிக்கைகளையும் எடுத்துக்கொள்ளும்படியும் அரசாங் கத்தைக் கேட்டுக்கொள்கிறேன்.

கடைசியாக கன்னியாகுமரி மாவட்டம் தாய்நாட்டோடு சேர்ந்து 4½ ஆண்டுகள் நான்கு கழிந்துவிட்டன. சேர்ந்த பிறகு நமது மாநில சர்க்கார் ஒவ்வொரு இலாகா வழியாகவும் அந்த மாவட்டத்தின் நன்மைக்கும், மேம்பாட்டிற்கும் வேண்டி நாங்கள் எதிர்ப்பார்த்ததைவிட பன்மடங்கு பெருந் தொகைகள் செலவு செய்வதைக் கண்டு பெரும் மகிழ்ச்சி அடைகிறேன். ஆனால் ஒரே ஒரு கவலை. அங்குள்ள அரசாங்க ஊழியர்களின் சர்விஸ் இணைப்பு உத்தியோக உயர்வு பரிகாரம் காண சர்க்காரை மிகவும் பணிவன் புடன் கேட்டுக்கொள்கிறேன். இக்குறையைத் தீர்க்க நமது அரசாங்கம் ஒரு தனிக் கமிட்டியை நியமித்து வெகு சீக்கிரத்தில் ஒரு நன் முடிவை எடுக்கத் தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன்.

* SRI S. RANGANATHA MUDALIAR: Mr. Chairman, Sir, the Budget speech of the Hon. Finance Minister is heartily to be welcomed. His budget proposals have been variously criticised by the Opposition Members in the spirit of Opposition for the sake of Opposition. Some have criticised the same as election stunt. Some others have described it as pre-election budget. We should not bother about those criticisms, for they are merely 'Opposition Stunts'. But one Opposition Member alone has been able to discover a solitary virtue in the budget proposals, viz., the concession to poor students for free education up to XI Standard, irrespective of caste or creed. I congratulate him on that discovery. I agree with him and I further wish to point cut that this concession is a great one, a very great one as it shows a change in the policy of Government, according to which educational concessions shall in future be based on economic backwardness of communities and not on communal backwardness. By adopting this new policy our Government have set an example to other States.

The Budget reveas a deficit of Rs. 285 lakhs. Along with that announcement, there is another announcement that there shall be no new taxation proposals. The latter has taken away the element of terror from the former. What the deficit was due has

been explained in the Budget. The question now is what resources we are going to mobilise in the face of this deficit to make the Third Plan a sucess. The Budget speech hints at two such resources, firstly domestic savings and secondly State Loans. If we are going to depend on domestic savings as one of the resources, our Government should concentrate on the intensification of the Savings Campaign, in such a manner that the poorest man must feel pursuaded to save what he could within his limited means. The poorest man must be made to feel that he too has played his part in the building up of the State Developmental Schemes on the principle that many a new mickle makes a muckle. The rich man's contribution alone is not sufficient to enable the State to break through the inadequacy of financial resources. As regards State Loans, emphasis must be laid upon investment of the poor man. The poor man must be made to feel the pride that he has directly contributed towards the progress of the State. Our congratulations are due to Government for the determination to attain self-sufficiency in food production not only in normal seasonal conditions but also during adverse seasons. What with the large-scale production of chemical organic manures and what with the increased supply of improved seeds I should feel that this ambition is within the reach of practical politics.

Improvement in food production presupposes improvement in irrigation facilities. In our State almost all the major irrigation projetcs have been completed and our irrigation potentiality has been exploiting to the full. While so taking up of the medium irrigation projects, the contemplated improvement of the supply channels of old irrigation sources and the expansion of well irrigation all these residuary schemes will only touch the fringe of the problem. Our future hopes lie on the surplus of waters of rivers flowing in other States. An integrated approach, as our Hon. Finance Minister has put it, an approach of that kind, cn irrigation and power projects for the Southern Region as a whole is urgently needed. Mr. Trivedi, a member of the Planning Commission is his recent address at the conference of All India News papers Editors has said the same thing. I would like to quote what he said,—very similar to what our Finance Minister stated here :—

"If India wants optimum results from the irrigation and power projects it could be possible only through Inter State Co-operation and a strong feeling of national unity".

Mr. Trivedi added :

"For the development of river and power resources there should be no boundaries except the national boundary".

In this context it is hoped that our Government will make gallant efforts to induce the sister States to make such common approach for the benefit of each and good of all.

2nd March 1961] [Sri S. Ranganatha Mudaliar]

Coming next to industrial expansion of our State I wish to very gladly inform the House that the achievements of our State are on a scale which is very striking. There has been large scale industrial expansion in our State. But we should not forget the fact that we are only in the initial stages of founding new industries. Tremendous efforts will be necessary at the subsequent stages of operation and expansion. The financing of industrial expansion schemes will prove great problem. Here the advice of the well-known American Economist, Mr. Galbraith requires careful consideration. He says:

"In regard to such financing, the State should adopt the policy of utilising the earnings, the accumulated surpluses of the industrial enterprises instead of depending on such uncertain and exiguous sources as domestic savings".

The growth of industries pre-supposes improvement of sea ports and a sound transport system. We have been promised that the Madras Harbour is going to be expanded, and that the Tuticorin Port with its concomittant, Sethusamudram Project would also be improved. I would impress upon the Government the urgent need for improvement of such small ports as Pulicat, Cuddalore and Nagapattinam. Equally important and urgent is the widening and deepening of the Cooum and Buckingam Canal to relieve congestion in traffic. In this connection I would request Government to seriously consider the question of forming the Great Eastern Coastal Road from Madras to Tuticorin and to Cape Comorin. It is rather sad to note that the road development in our State has been rather slow. From 21,198 miles in 1950-51 to 25,878 miles in 1960-61 the progress is not encouraging for a decade. It has to be noted that only Rs. 11 crores has been allotted for this purpose which is rather inadequate. It is also noteworthy that for 1961-62 provision has been made only for 182 miles.

12-30 p.m.

Lastly, little has been mentioned about the slum problem. This problem is assuming threatening proportions not only in the City but also in the moffasil centres and towns. In this connection the dispersal of big industries and formation of smaller units of small scale industries in the moffasil places will be necessary to prevent the inflow of population from moffusil areas into the City. It has to be conceded that this slum problem is a staggering one. With all efforts our Government are putting forth to solve the problem, the problem is becoming more and more complicated and we have only to sympathise with our Government, who are groping their way to find quick and effective solution.

We are on the eve of the Third Plan and we can hope for its successful completion given the co-opertion of all parties and all sections of the public in this common endeavour as our Finance Minister said in the concluding portion of his Budget speech.

Thank you, Sir.

[2nd March 1961

* SRI A. R. MARIMUTHU : கனம் தலைவர் அவர்களே, இங்கு சமர்ப்பிக்கப்பட்டிருக்கும் பட்ஜெட் ரொம்ப ஜாக்கிரதையாக, இந்த ஆண்டு எவ்வளவு தூரம் வரி போடாமல் இருக்க முடியும் என்பதைக் கவனத்தில் கொண்டு தயார் செய்யப்பட்டிருக்கிறது. சென்ற பட்ஜெட்டில் குறிப்பிடப் பட்டிருந்ததைவிட, அதிகப்படி ரெவின்யூ வந்திருக்கிறது 1960-61-ல். ஆனால் சென்ற வருடம் வந்திருக்கக்கூடிய ரெவின்யூவைவிட இந்த ஆண்டு ரெவின்யூ குறைவாக வரும் என்று எதிர்பார்க்கப்பட்டிருக்கிறது. ஆக, 2 கோடி 85 லட்சம் ரூபாய் துண்டு விழும். இந்த பட்ஜெட்டைத் தயார் செய்து துண்டு விழும் தொகையைச் சரிப்படுத்த எந்தவித வகையும் செய்யப்படாமல் விட்டு விடப்பட்டிருக்கிறது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பமாகும் இந்நேரத்தில் முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களைவிட மூன்றாவதையும் பெரிதாகப் போட்டிருக்கிறது. மத்திய சர்க்கார் இப்பொழுதுள்ள வரிகள் போக மேற்கொண்டு 1,650 கோடி ரூபாய் வேண்டியிருக்கும், அதில் மூன்றில் ஒரு பங்கை ராஜ்ய அரசாங்கங்கள் தயார் செய்யவேண்டுமென்று மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறது. ஆக, இப்பொழுதுள்ள வரிகளைவிட அதிகம் போட்டுப் பணம் சேகரம் செய்ய வேண்டிய நிலையில் இருக்கிறோம். இருந்த போதிலும், தேர்தல் வருவதை மனதில் கொண்டு இந்த வருடம் வரி போடாமல் இருந்தால் நலமாகயிருக்கும் என்ற எண்ணத்தில் இந்த பட்ஜெட் தயார் செய்யப்பட்டிருக்கிறது. அதனால்தான் மேற்கொண்டு வரிபற்றி இந்த அரசாங்கம் ஒன்றும் கூறாமல் விட்டு விட்டிருக்கிறது. சென்ற ஆண்டு 34 லட்சம் துண்டு விழும் என்று நினைத்தது போக உபரியிருக்கிறது என்று ரிவைஸ்ட் எஸ்டிமேட்டில் மதிப்பிடப்பட்டிருக்கிறது. ஆக, துண்டு விழும் இந்த பட்ஜெட்டை இந்த அரசாங்கம் தைரியமாகக் கொண்டு வந்திருக்கிறதென்றாலும்கூட இதைச் சரிப்படுத்த என்ன வழி வகை செய்யப்பட்டிருக்கிறது? போக்கு வரத்து சம்பந்தமாக, "வேஸ் அன்ட் மீன்ஸ்" பற்றி என்ன செய்திருக்கிறார்கள் என்று கவனிக்கும்போது அதிலிருந்து தெளிவாகத் தெரிகிறது. எவ்வளவு தூரம் அதிகமாக செலவிட்டு நாம் வரி போடுவதை நிறுத்தியிருக்கிறோம் என்று. சென்ற ஆண்டு பட்ஜெட்டில் 12 கோடி வெளியே கடனும், மத்திய அரசாங்கத்தினிடம் 15 கோடி கடனுமாக ஆக 27 கோடி ரூபாய் கடன் வாங்கியிருக்கிறோம். ஆனால் இந்த வருடம் 35 கோடி கடன் வாங்குவதாக மதிப்பிடப்பட்டிருக்கிறது. அது மட்டுமல்ல. சென்ற ஆண்டு 27 கோடி ரூபாய் கடன் வாங்கி அதில் பழைய கடனைத் தீர்ப்பதற்காக 13 கோடி திருப்பிச் செலுத்தியிருக்கிறார்கள். அதாவது 25 கோடி கடன் வாங்கி 13 கோடி அளவுக் கடனைத் திருப்பிக் கொடுத்திருக்கிறார்கள். ஆனால் இந்த ஆண்டு 37 கோடி கடன் வாங்கி 10 கோடி திரும்பக் கொடுக்கப் போகிறார்கள். ஆக,

2nd March 1961] [Sri A. R. Marimuthu]

நமது கடன் நிலை இந்த ஆண்டு மேலும் ஏறியிருக்கிறது என்பது தெளிவு. இந்த ஆண்டு பட்ஜெட் தயாரிக்கும்போது நமது க்ளோஸிங் காஷ் பாலன்ஸ் 5 கோடி சொச்சம் இருந்தது. ஆனால் அடுத்த ஆண்டு 78 லட்சம்தான் க்ளோஸிங் பாலன்ஸ்-ஆகக் காட்டப்பட்டிருக்கிறது. கஜானா காலி செய்யப்பட்டிருக்கிறது. அடுத்தபடியாக நம் அஸெட்ஸ்-யை எடுத்துக் கொள்வோம். எக்ஸஸ் அஸெட்ஸ் ஓவர் லையாபிலிடி குறைந்திருக்கிறது. எப்படி யாவது இந்த ஆண்டு நிதி நிலையைச் சரிக்கட்டி விடலாம் என்று நினைத்தாலும், அடுத்த ஆண்டு இது ஒரு பெரிய பாரமாகப் போகும். அப்பொழுது அரசாங்கம் அந்தப் பாரத்தை ஏற்று அந் நிலையைப் போக்க வேண்டியிருக்கும். பொதுவாக நாட்டில் பொருளாதார அபிவிருத்திக்காகத் திட்டங்கள் போடப்பட்டு அதன் மூலம் நம் நாடு அபிவிருத்தி அடைந்திருக்கிறது என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். யாரும் அதை மறுப்பதற் கில்லை.

(Mr. Speaker in the Chair.)

ஆனால் அபிவிருத்திக்காக நாம் எவ்வளவு தொகை ஒதுக்கி யிருந்தோம், அத்தொகை மூலம் நாம் எதிர்பார்த்த அளவு அபி விருத்தி ஏற்பட்டிருக்கிறதா என்று பார்த்தால் நாம் எவ்வளவு தூரம் அபிவிருத்தி ஏற்படும் என்று நினைத்து திட்டம் போட் டோமோ அந்தளவு பொருளாதாரப் பெருக்கத்தை நாம் பெற முடியவில்லை என்ற முடிவுக்குத்தான் வரமுடியும். பொதுவாக உணவு உற்பத்தியை எடுத்துக்கொள்வோம். இரண்டாவது திட்டத்தில், உணவு உற்பத்திப் பெருக்கிற்காக 29 கோடி ரூபாய் நாம் ஒதுக்கியிருந்தோம். அதன் டார்ஜட், 57 லட்சம் டன் உற்பத்தி பெருக வேண்டுமென்று போட்டிருந்தோம் திட்டம். ஆனால் ஒதுக்கப்பட்ட தொகையைவிட ரூபாய் 3 கோடி அதிக மாகச் செலவு செய்தும் 51½ லட்சம் டன்தான் உற்பத்தியைப் பெருக்கியிருக்கிறோம். இது எந்த நிலையைக் காட்டுகிறது என்றால், எவ்வளவு அதிகப்படியாகச் செலவழித்தாலும் நாம் எதிர்ப்பார்த்த அளவு உற்பத்திப் பெருக்க அளவை எட்ட முடிய வில்லை. எவ்வளவுக்கெவ்வளவு நாம் அதிகப்படியாகச் செலவு செய்கிறோமோ அதற்கேற்றபடி உற்பத்தியைப் பெருக்கினால் ஒழிய நாட்டில் பண வீக்கத்தைப் போக்க முடியாது. ஒதுக்கப்படும் தொகை, நம் லட்சியம் ஈடேறத்தக்க வகையில் அது செலவழிக்கப் படவில்லை. அதை நாம் கவனத்தில் கொண்டு அதற்கேற்றபடி நடக்கவேண்டும். ரசாயன உரம் இல்லாததினால்தான் உணவு உற்பத்தி அளவைக் கணிசமான அளவு எட்ட முடியவில்லை என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அது ஒரு காரணம்தான், இல்லை யென்று சொல்லவில்லை. ஆனால் ரசாயன ஊத்தை மட்டும் காரணமாக வைத்துக் கொண்டு உற்பத்தியின் அளவைப் பெருக்க முடியவில்லை என்று சொன்னால் அதை என்னால் ஒப்புக் கொள்ள முடியாது. ரசாயன உரம் கொடுக்கிறோம், கடன் வசதி செய்து கொடுக்கிறோம், இவைகளை எல்லாம்

[Sri A. R. Marimuthu] [2nd March 1961

காலாகாலத்தில் செய்து கொடுக்கப் போதுமான முயற்சிகள் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும். அப்படிச் செய்வதானல் இன்னும் உற்பத்தியை அதிகமாகப் பெருக்கிக் காண்பிக்க முடியும். எந்த நேரத்தில் கடன் கிடைக்கவேண்டுமோ அந்தக் காலத்தில் கிடைப்பதில்லை. ரசாயன உரம்கூட, அதிகமாக இருந்தால் கதிர்கள் முற்றிவிட்ட பிறகுதான் கிடைக்கிறது. அரசாங்கத்திற்கும், இவைகளை வாங்கி விநியோகிப்பதில் சிரமங்கள் இருக்கலாம். எவ்வளவு சிரமங்கள் இருந்தபோதிலும் ஆங்காங்குள்ள ஸ்டாக்கை வைத்துக் கொண்டாவது காலாகாலத்தில் அவைகளைக் கொடுக்க வேண்டும். அதேபோல் கடன் வசதியும் காலா காலத்தில் கிடைப்பதற்கு வேண்டிய வழிவகை செய்ய வேண்டும். அதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டும். அப்படிச் செய்தால் நாம் நமது உற்பத்தியை நல்ல முறையில் பெருக்க முடியும், அதற்கு அவை உதவபடியாக இருக்குமென்று தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, விலைவாசி ஏற்றத்தை எடுத்துக்கொள்வோம். நாட்டில் பொருளாதார அபிவிருத்தி ஏற்பட்ட போதிலும் விலை வாசி ஏற்றம் மக்கள் தாங்க முடியாத அளவிற்கு ஏறிப் போயிருக்கிறது. விலைவாசி ஏற்றத்தை எப்படிக் கட்டுப்படுத்துவது என்பதில் அரசாங்கம் பரிபூர்ண கவனம் செலுத்தவில்லை யென்றால் நமக்கு ஏற்பட்டிருக்கக்கூடிய அபிவிருத்தியால் சாதாரண மக்களுக்குக் கிடைக்கக்கூடிய பயன் கிடைக்காமல் போய்விடும். பொருளாதார ஏற்றத் தாழ்வை எடுத்துக் கொள்வோம். சோஷியலிஸ சொஸைட்டியை நோக்கி நாம் போய்க்கொண்டிருக்கிறோம் என்று சொல்லும்போது பொருளாதார ஏற்றத் தாழ்வை நாம் எந்தளவு போக்கியிருக்கிறோம் என்று பார்த்தால் பொருளாதார ஏற்றத் தாழ்வு குறைந்ததாகத் தெரியவில்லை. அப்படிக் குறைவதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும். ஆகவே பொருளாதார ரீதியாக இதற்கு நடவடிக்கை எடுக்கவில்லை என்றால் ஏழை எளியவர்கள் நலனை நாம் காப்பாற்ற முடியாது. இன்னும் எடுத்துக் கொண்டால், அரசாங்க நிர்வாகச் செலவுக்காக நாம் வருடா வருடம் அதிகமாகச் செலவு செய்து கொண்டே இருக்கிறோம். இந்த வருடத்திலும் நிர்வாகச் செலவுக்காக அதிகமான அளவில் பணம் ஒதுக்கியிருக்கிறோம். ஆனல் நிர்வாகத் திறமை குறைந்து கொண்டுதான் இருக்கிறது என்று சொல்ல வேண்டும். ஒரு டிப்பார்ட்மெண்டில் இருக்கிற குறையை எடுத்துச் சொல்லி அதை நிவர்த்தி செய்யவேண்டும் என்று சொன்னல் அந்தக் குறை நீக்கப்பட வேண்டும் என்றால் எவ்வளவோ முயற்சி செய்ய வேண்டியிருக்கிறது. இதற்காக வருடக் கணக்கில் முயற்சி செய்ய வேண்டியிருக்கிறது. இவ்வளவு திறமைதான் இருந்து கொண்டிருக்கிறது. அரசாங்க நிர்வாகத்தில் இருக்கின்ற குறைகளை எல்லாம் போக்குவதற்கு அரசாங்கம் உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். நம் ராஜ்யத்தைத் தவிர வேறு பல இடங்களில் ஒவ்

வொரு இலாகாவுக்கும் அமைச்சர்களுக்கு அடுத்தபடியாகப் பார்லிமென்டரி காரியதரிசிகளைப் போட்டிருக்கிறார்கள். அமைச்சருக்கு அடுத்தபடியாக நிர்வாகத்தை ஏற்றுக்கொள்வதற்கு இவ்விதம் பார்லிமென்ட் காரியதரிசிகளை நியமித்திருக்கிறார்கள். அதே போன்று நம்முடைய ராஜ்யத்திலும் இவ்விதம் நியமித்தால் நலமாக இருக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அரசாங்க வருவாயைப் பெருக்கும் விஷயத்தில் அதிகப்படியான அளவில் வருவாயை பெருக்குவதற்காக அரசாங்கம் பஸ் போக்குவரத்தை எடுத்து நடத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, என்னுடைய பகுதியில் தண்ணீர் பாய்ச்சுவது சம்பந்தமாக இருக்கின்ற கஷ்டங்களைப்பற்றி பல தடவை இதே சபையில் எடுத்துச் சொல்லியிருக்கிறேன். ஜி.எ. சானலில் வரக்கூடிய தண்ணீர் கடை மடையில் இருக்கக்கூடிய விவசாயிகளுக்குப் போய்ச் சேராமல் அவர்கள் வருடா வருடம் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். வடவார் எக்ஸ்டென்ஷன் வாய்க்காலிலும் சாகுபடி சமயத்தில் தண்ணீர் போய்ச் சேராததின் காரணமாக நிலங்கள் எல்லாம் தரிசாக இருக்கின்றன. இந்தக் கஷ்டம் உடனடியாக நிவர்த்திக்கப்படும் என்று சென்ற வருடம் தெரிவிக்கப்பட்டது. அதற்காக எடுத்துக்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள் எந்தவிதமான பயனையும் அளித்திருப்பதாகத் தெரியவில்லை. ஆகவே இந்தக் கஷ்டத்தை உடனடியாகப் போக்குவதற்கு ஏதாவது நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். ஸ்தல அபிவிருத்தித் திட்டங்களுக்கு நாம் வருடா வருடம் எவ்வளவோ பணம் ஒதுக்கியிருக்கிறோம். இந்த வருடமும் சுமார் 1 கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம். ஆனால் ஜில்லா போர்டில் இருக்கின்ற நிதி நிலை காரணமாக காண்டிரிபியூஷன் கொடுக்க இயலாமல் ஒதுக்கப்படுகிற பணமும் செலவு செய்யப்படாமல் இருக்கிறது. தஞ்சாவூர் ஜில்லாவைப் பொறுத்த வரை, மிகவும் சிரமம் ஏற்பட்டிருக்கிறது. ஆகவே அரசாங்கம் ஸ்தல அபிவிருத்தித் திட்டங்களுக்குப் பணம் ஒதுக்கினால் மட்டும் போதாது, அந்தந்த ஸ்தல ஸ்தாபனங்கள் வேலைகளை ஏற்று நடத்தக்கூடிய முறையில் அவர்களுக்கும் வேண்டிய உதவி செய்து கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, அதிராம்பட்டினத்தில் மீன் பிடிக்கும் தொழிலாளர்கள் படுகின்ற கஷ்டத்தைப்பற்றி கனம் அமைச்சர் கக்கன் அவர்கள் பார்த்தார்கள். அவர்கள் வெள்ளத்தால் எந்த விதமான கஷ்டமும் அடையாதபடி காப்பாற்றப்படுவார்கள் என்று கூறினார்கள். ஆகவே அதற்காக வேண்டிய நடவடிக்கைகளை துரிதமாக எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். எங்கள் பகுதியில் இலங்கையிலிருந்து திரும்பி வந்தவர்கள் வேலையில்லாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு

ஏதாவது வேலே கொடுக்க முடியுமா என்பதைப்பற்றிப் பரிசீலித்து அவர்களுக்கு ஏதாவது வேலே கொடுக்க நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்ததாக, ஹரிஜனங்களுக்கு வீட்டு மனைகள் கொடுக்கும் விஷயத்தில் மிகவும் காலதாமதம் ஆகிறது. ஒரு கிராமத்தி லுள்ளவர்களுக்கு மட்டும் மனைக்கட்டுகள் வழங்க நான்கு ஆண்டு கள் காலமாகியிருக்கிறது. ஹரிஜனங்கள் அல்லாமல் ஹரிஜனங்கள் அல்லாதார் கூலி வேலே செய்யக் கூடியவர்கள் எத்தனையோ பேர்கள் இருக்கிருர்கள். இவர்கள் குடியிருக்கிற இடத்திலிருந்து, அவர்கள் குடியிருக்கிற இடத்தின் சொந்தக்காரர் இந்த இடங்கள் குடியிருக்கின்றவர்களுக்குச் சொந்தமாகிவிடுமோ என்ற பயத்தின் காரணமாகக் குடியிருக்கின்றவர்களை வெளியேற்றிக்கொண்டிருக்கி ருர்கள். இம்மாதிரியான நடவடிக்கை அந்தப் பக்கத்தில் இப் போது பரவலாகப் பரவிக் கொண்டிருக்கிறது. ஆகவே இவ்விதம் ஹரிஜனங்களாய் இருந்தாலும் சரி, ஹரிஜனங்கள் அல்லாதார் களாய் இருந்தாலும் சரி, நிலமில்லாத மக்களுக்கு மனைக்கட்டுகள் கொடுக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, நிலவரி வசூல் சம்பந்தமாகச் சில வார்த்தை கள் சொல்ல விரும்புகிறேன். வரிகளை அரசாங்கம் வசூல் செய்ய வேண்டியதுதான். வரி வசூல் செய்யாமல் எந்த அரசாங்கமும் நிர்வாகத்தை நடத்த முடியாது. ஆனல் வரி வசூல் செய்யும் காலத்தை நிர்ணயிக்கின்றபொழுது மிகவும் கவனமாய் இருக்க வேண்டும். சாதாரணமாக சாகுபடி காலத்தில் நடவு வேலேக்காக விவசாயிகள் பணம் தயார் செய்து வைத்திருப்பார்கள். அந்த நேரத்தில் கடுமையாக நடவடிக்கை எடுத்து வரிவசூல் செய்வது என்பது சரியல்ல. அறுவடை காலத்தில் வரிவசூல் செய்வதை நான் குறை சொல்லவில்லை. ஆனல் சாகுபடி காலத்தில் வரிவசூல் செய்வதின் காரணமாக சாகுபடி பாதிக்கப்படும். அதன் காரண மாக உணவு உற்பத்தியும் நிச்சயமாக பாதிக்கப்படும். ஆகவே அறுவடை காலத்தில்தான் வரிவசூல் செய்யவேண்டும், சாகுபடி காலத்தில் வரிவசூல் நடத்தக் கூடாது என்று கேட்டுக்கொள் கிறேன்.

அடுத்தபடியாக, சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் ஸ்டாப் நர்ஸ்கள் நியமித்திருக்கிருேம். அதே போன்று ஜில்லா போர்ட் ஆஸ்பத்திரி களிலும் ஸ்டாப் நர்ஸ்கள் இருக்கிருர்கள். இவர்களுடைய சம்பள விகிதத்தில் ஏற்றத் தாழ்வு இருக்கிறது. இதனல் அவர்களுடைய வேலேகள் மாறுபடவில்லே. இருவரும் ஒரே விதமான வேலேதான் செய்து கொண்டிருக்கிருர்கள். இதைப் பற்றியும் பரிசீலனை செய்து பார்த்து இந்தக் குறையைப் போக்குவதற்கு நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

ஒரத்தநாடு கால்நடைப் பண்ணையை இன்னும் விஸ்தரித்தால் நன்ருக இருக்கும். இதில் அரசாங்கம் கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

2nd March 1961] [Sri A. R. Marimuthu]

முக்கியமாகத் தரிசு நிலங்களை நிலமில்லாதவர்களுக்கு ஜாரி செய்து கொடுப்பதில் மிகுந்த காலதாமதம் ஏற்படுகிறது. அவற்றை நன்றாகக் கவனித்து உடனடியாக ஜாரி செய்து கொடுப்பதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் . . . ,

(மணியடிக்கப்பட்டது.)

* SRI R. SRINIVASA IYER : Sir, this Budget has been generally welcomed by the Press. It indicates the general impression among the public. I was wondering whether anything at all can be said against this Budget. But, when I find that the same old slogans of 'North versus the South', 'the slavish mentality of the Government' etc., are repeated over and over again, I only feel it shows the hollowness of the Opposition comments on this Budget. The Budget speech of the Hon. Finance Minister is a resume of the past events that have taken place in the Second Plan period, what we have done in that period and what we propose to do in the Third Plan period thereby satisfying the public that the ways and means position of this State is good and we can easily raise the resources contemplated and spend the amounts that we have raised by way of loans and by way of subventions or grants from the Central Government in a proper manner. In this connection, though we have spent nearly Rs. 34 crores over and above the Plan provision in the Second Plan, I desire to point out that we have spent Rs. 30·19 crores more on power, Rs.3·86 crores more on Industries but about Rs. 5·13 crores or so on roads, tourism, welfare of backward classes, social welfare and other miscellaneous activities has not been spent. That is, we have spent less than the provision in Second Plan on these.

Sir, I wish to point out that roads are very important for the economic welfare of the country, particularly the village side. We have to increase food production. The agriculturist is toiling hard, but he does not get a good return as he is not able to take his produce to the markets easily and quickly and at cheaper cost. All along, they have been depending upon roads and so, the improvement of the roads is a very great thing. I hope that at least in the future, in the Third Plan period, the provision will be increased from Rs. 11 crores to something more. I hope the Madras Government will be able to get at least Rs. 5 crores more and that the East Coast Road will be taken up in any event by their strenuous efforts in spite of the Minister of Transport and Communications at Delhi and the Planning Commission who have been telling us that the Central Government have no funds to extend the length of National Highways and are not very much in favour of increasing the mileage under National Highways.

Sir, we have got this Budget with a deficit of Rs. 2·85 crores; but certainly, we can expect that this deficit will be made good and we will end with a surplus as we have been doing in the past years. In this connection, I have got to point out that the

income from the General Sales Tax has gradually increased from Rs. 11.50 crores to about Rs. 14 crores. I am constrained to state that with a little more careful administration of the General Sales Tax Act, we can get at least Rs. 18 crores if not Rs. 21 crores which amount we envisaged when Prohibition was first introduced in this State.

We lost Rs. 21 crores by introducing Prohibition We must see that the Sales Tax Department is toned up. On the one side there is a general complaint that there is harassment and on the other side there is evasion and corruption. Both the officers and the public are responsible for this state of affairs. I have come across complaints that certain officers of this department dictate terms and if that is not obeyed, the person concerned would be harassed with vary heavy taxation which he cannot bear and he has to close down his business. At the same time the public also should co-operate with the department in paying their tax properly and maintaining accounts properly. Double sets of accounts have been maintained. I do not know when we are going to have that sort of social mentality to realize that without honestly paying our share of tax, no Government can get on. Sir, in this connection, I want to make an important suggestion for the consideration of the Hon. Minister in charge of the department. The Revenue and the Sales Tax Departments should be amalgamated if possible by inter-change of officers and transfer of officers at least once in two years, if not three years. I know of cases where a person has been transferred for more than five years ago and gets 'mamool' at his former place of employment. If really the 'Kamadhenu', that is the sales tax, is to yield us the expected revenue . . . .

THE HON. SRI R. VENKATARAMAN : If the hon. Member has any such case, the Government would be very grateful if he communicates it in confidence.

SRI R. SRINIVASA IYER : Yes, Sir. The whole difficulty is that so far as corruption is concerned, the public will not come forward to give evidence, because they will be equally guilty. This is what is happening.

THE HON. SRI R. VENKATARAMAN : The hon. Member may communicate it and it will be properly investigated through the 'X' Branch.

SRI R. SRINIVASA IYER : Yes, I shall do so.

At the same time, my suggestion is that to avoid complaints like this, the general feeling among the public is that the department is rather harassing and not really collecting tax. The Revenue Department and the Sales Tax Department may be amalgamated and there may be mutual transfers from one department to another. If we do that, we can get the expected income from the sales tax itself to make good the deficit in the budget rather than think of

2nd March 1961] [Sri. R. Srinivasa Iyer]

getting subventions from the Central Government or a share in the additional taxes proposed to be levied by the Central Government and in that way we can make up our deficit.

On all sides we have been progressing well, particularly on the food front but at the same time there is a cry that prices have gone up. To-day during Question hour it has been stated that the price of chillies, tamarind and other agricultural products has gone down and that the Government should come forward to help them. At the same time those people who want that the price of food-grains should go down, should know that the cost of production has gone up a great deal. The agriculturist has got to be guaranteed a minimum price which will not make him lose for carrying on his agricultural operations. The basic price should be fixed. It may not be necessary to come to the rescue of the agriculturists now because prices have neither gone up nor gone down too much. As the Hon. Minister for Home has stated this morning, it rose last year and it has come down a little. It does not mean that it has gone down in every respect. At the same time those who induce the labourers to claim more and more wages without a guarantee of efficient work and thus increase the cost of production should be prepared to pay for the commodities produced at such heavy cost.

Sir, with regard to roads and communications which I have mentioned in the beginning, in the Draft Third Plan which was discussed in this House, there is a statement that Rs. 5 crores would be allotted for the development of the East Coast Road, about 450 miles in length in Madras State. In the Tanjore district, it is 141 miles in length. I wish to point out to the Government that about 100 miles are adjacent to the sea. If it is developed into a National Highway, it will be the longest Marina in the world. Apart from the Tourist Traffic, the route from Madras to Rameswaram will be the shortest route along this road. At the same time there is a statement that for want of population, roads cannot be developed. It is good roads that develop the population. We find houses and shops coming up where there are good roads and there will be bus stops. Therefore this Government should exercise all their powers and plead with the Central Government to allot these Rs. 5 crores for the Eat Coast Road. As I was going through the figures contained in the Civil Works Detailed Budget, I found that the Tanjore district had not got as much amount as it ought to get for road development. Especially the backward area requires special treatment, particularly the road from Keeramangalam to Kothamangalam in the Pattukkottai taluk and the road from Avadiarkoil to Kottapalayam in Arantangi taluk—security roads like the roads in the Mudukalathur taluk in the Ramanathapuram district. There are a number of villages where fishermen live in the Tanjore disitrict on the east coast and none of the fishermen villages have been connected to the main road. When the East Coast Road is developed, these village roads also should be developed. As

they are very important they should be taken up for execution. After all, these villages are situated about a mile or four furlongs from the main road. With the introduction of a bus route from Sethubavachatram to Pattukkottai, the distance from Pudukkottai to Sethubavachatram is considerably reduced to only a distance of 37 miles and fishermen can be enabled to market their hard-earned produce in an hour and a half to Pudukkottai which is a good market for fish. I request the Government be look into this aspect of the matter.

With regard to road-rail co-ordination, the latest report of the Mehta Committtee has got to be implemented in every respect. In the Tanjore district we have got parallel bus routes along the rail routes. These bus routes must be diverted to feeder routes, i.e., routes which will feed railway stations and other towns and markets. If only feeder routes are developed and the main road is connected with the feeder routes, it will go along way to get over the difficulties experienced by the villagers to carry their produce to the market.

One other important matter I would like to refer—it has also been referred to by the hon. Member, Sri Marimuthu—is that we are not able to have Local Development Schemes because of one snag. Under existing orders of Government, in the first stage Blocks, Local Development works cannot be carried on in spite of the fact that they are committed works and one-fourth contrition has been made by the public. Though provision is made in the Block budget for the first stage blocks also, the amount allotted for road communication is very small. In the Pattukottai taluk there are village roads, other district board roads and major district roads. There is a proposal to develop the Pattukottai Mannargudi road (via) Vadaseri which has been hanging fire for more than five years.

1 p.m.

Sir, the Panchayat Act was passed in 1958. Proposals were made to treat the road from Pattukottai to Mannargudi (via) Vadaseri as a major district road and the Pattukottai to Sethubavachathram road, as a major district board road several years before the Act was passed. But six years have passed and till no orders have been passed. Therefore on the pretext that they are classified as other district board roads, the Panchayat Unions are asked to maintain them. It is impossible to maintain such a long-distance road of 39 miles in a Panchayat Union Block, with a meagre grant by Government of 40 nP. per head of population in each Panchayat Union so far as development of roads is concerned. At least such blocks should be classified as poor blocks, backward blocks and not included in First Class Blocks. More money should be provided for the district board for paying contribution to local development works which have been started and taken up before the introduction of Panchayat Unions. Local development programme which is a good method of tapping local resources should be contained in blocks also.

2nd March 1961] [Sri R. Srinivasa Iyer]

In Tanjore we have the Vedaranyam swamp, where very large quantity of salt is being formed every year and wasted in the winter. A number of investigations have been made and I have been told that if a sum of Rs. 3 crores is invested on a scheme, we could get Rs. 1 crore every year. But that programme has not yet been taken up. At least as a beginning, a research station should be set up. A factory for the manufacture of soda ash or caustic soda in Vedaranyam will be a great boon for the Tanjore district.

I cannot conclude without mentioning about the importance of development minor ports like Athirampattinam, Point Calimere and Kottapatnam. Development of minor ports has become a necessity. If railways cannot cope with extra traffic became of the Third Plan, development of minor ports in the East Coast has got to be given proirity and minor ports in a East Coast have got to be developed. There is a report of the Committee about this

Lastly I would like to mention about Madras City roads. I expected that the Hon. Finance Minister who is living just opposite the Buckingham Canal would say something about the improvement of Buckingham Canal and the City roads. It would be better and approrpiate if the Madras Government could take action under Sections 40 to 44 of the City Municipal Act and take over the roads in the City or at least the main bus routes and cement concrete them at their cost. They have invested about Rs. 40 crores on 750 buses and it works out to half a lakh for each bus. If only the depreciation amount is calculated because of the bad roads, it would be worthwhile to invest largely on roads. (Raja Muthiah Chettiar of Chettinad : Government give grants to Corporation and Corporation should maintain these roads in good condition). In the Corporation, more time is wasted in accusing one party or the other for neglet of roads and the Buckingham Canal. They spend more time on finding fault with others, changing names of streets and so on rather than on improving the City. What I say is that Mount Road and Poonamallee High Road should be taken over by Government. Government should step in and improve these roads. Otherwise the roads would not improve. I am saying this with 50 years' experience in the City. The Queen's visit was welcome and the roads were improved. But when the Queen has gone back to England, the roads improved during her visit and purposely for her visit also seem to be going back to their original condition. The Corporation has failed to take appropriate action to improve our City roads. Government should step in and improve the main roads at least.

The stink from the Buckingham Canal must go at some time or other. We must make it navigable for commercial purposes. Lastly, I want to say that sea water should be let in to fluh the Cooum and the stink should be removed. That is very important.

MR. SPEAKER : Before I call Sri William to speak I want to make an announcement to the House. The House will sit to-day till 2.00 p.m. There will be no sitting in the evening. The House will meet again at 8-30 a.m. to-morrow.

[2nd March 1961

* SRI M. WILLIAM : In supporting the Budget I want to say that the Hon. Finance Minister has kept in view the objective of our Government, i.e., the creation of a Welfare State. In all the steps that have been taken and in all the steps that are proposed to be taken, this objective is kept in view.

(Deputy Speaker in the Chair.)

That is clear from the various provisions that are contained in the Budget. Some members in the Opposition have criticised that this is an election budget. that this is an election stunt or that there is nothing new or worthwhile in it or that it is only a record of past achievements and an indication of things that are to be attained. One cannot but say that this is a budget which contains outstanding features. The most outstanding feature is the concession that is to be granted to students on the basis of economic backwardness, upto XI standard. By that, this Government have accepted a wholesome principle. This State will be the forerunner in this aspect. I am sure that all other States will follow the example set by this State. By this communal harmony is also ensured because in all communities there are large sections of people who belong to the poor class. These people have been entertaining a feeling hitherto that their state is worse than the Harijans but still their case had not been considered by Government. By accepting this wholesome principle, this State has set up a precedent and I think it will result only in communal harmony and would augur well for the prosperity of the State in that no deserving student will be denied facilities for education on account of poverty.

Another important scheme that I would propose is the establish-tile class. A lot of inconvenience and harassment is being experienced by the traders who have to wait at the doors of the officers for the inspection of their accounts. They have to wait for two or three days in a week. The facility of compounding in sales tax for small traders with a turnover of not more than Rs. 50,000, now announced in the Budget will be a boon to the mercantile class. Thousands of merchants will welcome this and it would certainly save them the time that they have to spend now at the hands of these officers over the inspection of their accounts.

Another important feature is the expansion of credit facilities to the rural folk. There is an importance provision, viz., the Full Finance Scheme. That is in operation in some Panchayat Unions. It is proposed in this Budget that it would eventually be extended to all Panchayat Unions. So much so every small farmer and cultivating tenant will get credit facilities and the village money-lender will be completely elminated. Our Hon. Finance Minister has even gone to the extent of saying that this Government is even prepared to share any loss that might result by the extension of credit facilities to small farmers and cultivating tenants who cannot furnish sufficient security. This is an important step. This shows that the poorest of the lot are also taken into account in the Budget and that the Finance Minster has kept in view and not lost the objective of our Government.

2nd March 1961] [Sri M. William]

With regard to the agricultural production, it has been said by the Hon. Finance Minister that our State has reached a stage of self-sufficiency in food in normal seasonal conditions. It is also proposed that Rs. 45 lakhs would be given as credit to the agriculturists and that food production would be increased to 07 17 lakhs tons by the end of the Third Plan.

The grant of subsidy of Rs. 2 per maund for producing improved seeds to the agriculturists in the villages and extended facilities to irrigation and the establishment of fertiliser factories both in the public and private sectors—all these things cannot but contribute to the increase of agricultural production and I am sure that the estimate or target in the Third Plan would be achieved.

In the industrial sector also, we find that there are vast developments. There is all round success in all aspects of the economy. Several industries have been started and several industries are proposed to be started. So much so, I am sure that our State will attain the progress that is envisaged in the Third Plan. In this context, I want to say a few words about the district from which I come. Of course, new schemes are mentioned in the Third Plan and one important scheme is Cittar-Pattanamkal scheme. That scheme was included in the Second Plan while we were in the Travancore-Cochin State. Subsequently, during the merger with this State, this was not executed for some reason or other. In the draft plan this scheme has been included now and I request the Government to give top priority to this scheme. It may cost only about a crore and odd. By this scheme 17,000 acres might be brought under cultivation and it would also improve drinking water facilities.

Another important things is the concession granted to the mercamment of a rubber factory in Kanyakumari district. There are possibilities for it. There are enough of raw materials available in the shape of rubber. Private individuals have taken to cultivation of rubber and there is ample quantity of rubber. Small scale industries can be opened in that district. Of course, people in the Kanyakumkari district as a whole are poor and there are no capitalists worth the name to start these industries in the private sector. I, therefore, request the Government to sympathetically consider this aspect and start these industries.

With regard to Palm gur industries, that is one of the nine industries chosen by the All-India Khadi Board. About 50,000 families are dependent on this industry. Under the Second Plan about 12 lakhs of rupees was allotted for this purpose and hardly a lakh was spent. There was a central co-operative society which was mismanaged. I filed an appeal that an Advisory Committee may be appointed and the management may be taken over by that Committee but the society was liquidated. We agitated for the formation of a district federation. A conference was also held about a year ago and proposals were sent to the Government for registration. This is pending for over a year. I request

[Sri M. William] [2nd March 1961

the Government to expedite the matter and get these societies registered. I also request that insurance system may be instituted to benefit the tapper families.

I also request the Government to relax the provision with regard to the catering Establishment Act. Under this, licence has to be taken by merchants. Even small merchants who have invested Rs. 10 or 15 have to pay a licence fee of Rs. 10 and obtain a licence. In the Madras State we find that the first grade Panchayats alone are included. But in Kanyakumari district, irrespective of the financial position of the Panchayats, all panchayats are brought under the Catering Establishment Act. Even small owners of hotels who have been invested Rs. 20 or 25 in the business and who may not even get 2 or 3 rupees per day have to take a licence after paying Rs. 10. This works a great hardship on them. I therefore request the Government to relax the provisions and exempt the panchayat areas.

The Budget that is placed before us is a progressive one which has got in view the prosperity of the people and therefore all praise and credit is due to the Finance Minister who has presented the same.

* **Sri P. S. ELLAPPAN :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த வருஷம் பட்ஜெட் விவாதம் ரொம்ப சுலபமாக நடக்கிறது. காரசாரமாக ஒன்றுமே காணும். பின்னலே என்ன ஆகுமோ தெரியாது. இந்த நிலையிலே அந்த அளவிற்கு நான் போகவில்லை. அது ரொம்பப் பெரிய விஷயம். தூக்க முடியாத சமாசாரம். ஆகவே என்னுடைய தாலுகாவிலே இருக்கப்பட்ட நிலைமையைப்பற்றி மாத்திரம் ஏதோ ஒன்றிரண்டு விஷயங்களைச் சொல்லவே விரும்புகிறேன். சமீபத்தில் பெய்த மழையின் காரணமாக பெரிய சேதம் மதுராந்தகம் தாலுகாவில்தான் எற்பட்டது என்பதை அனைவரும் அறிவர். அதிலே கிட்டத்தட்ட 87 ஏரிகள்—பிரமாதமான ஏரிகளெல்லாம்—உடைந்துவிட்டன. அதுவும் நானிருக்கும் இடத்திற்குச் சமீபத்தில் இருக்கக்கூடிய சூணம் பேடு பார்டரில் 3 கிராமங்களில் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கின்றன. வெள்ளங்கொண்டகரம், புதுப்பட்டு, விளாம்பட்டு ஆகியவை ரொம்பவும் பாதிக்கப்பட்ட கிராமங்கள். ஓங்கூர் ஆற்று வெள்ளம், ஏரி வெள்ளம் இரண்டும் கிராமங்களில் புகுந்து இந்த மூன்று கிராமங்கள் ரொம்பவும் பாதிக்கப்பட்டு மக்கள் நிரபராதியாகத் தவித்துக்கொண்டிருக்கிறார்கள். நமது மராமத்து இலாகா மந்திரி அவர்கள் நேராக அங்கு வந்திருந்த போது அந்த இடங்களை எல்லாம் அவருக்குக் காண்பித்தேன். நிலம் எங்கு இருக்கிறது, யாருடையது, பயிரிடப்பட்ட பூமியா, சும்மா கிடந்த பூமியா, அல்லது எப்பொழுதும் மணல் மேடாக இருந்த பூமியா என்று தெரியாத நிலையிலே வெள்ளம் வந்து மணல் மேடாக ஆக்கிவிட்டது. அடியேன் அந்தவகையில் 2½ ஏகரில் நடவு செய்திருந்தேன். அதைத் தவிர எனக்கு வேறு நிலம் கிடையாது. என்னுடைய அதிருஷ்ட

2nd March 1961] [Sri P. S. Ellappan]

மோ என்னவோ தெரியவில்லை. என்னுடைய கழனிக்கு நேராக ஏரி உடைந்துவிட்டது. ஏரி உடைந்து மண் மேடிட்டு நிலம் தூர்ந்துவிட்டது. என்னுடைய நிலத்தில் கல் எங்கே இருக்கிறது என்றுகூட கண்டுபிடிக்க முடியாது. 'கல்கூட தெரியவில்லையே, இது மேடா அல்லது பயிரிட்ட பூமியா, அல்லது எபபொழுதும் மேடாகவே இருக்கும் நிலமா' என்று அமைச்சர் அவர்கள் கேட்டதற்கு 'அடியேனுடைய நிலம்தான் இந்த நிலைக்கு வந்திருக்கிறது' என்று சொன்னேன். 'ஐயோ, பாவமே, உங்களுக்கா இப்படி வந்தது' என்று கனிவுடன் கேட்டார்கள். (சிரிப்பு) எனக்கு வந்தால்தானே மற்றவர்களுக்கும் விமோசனம் தேட முடியும் என்று சொன்னேன். இப்பொழுது 216 சம்சாரிகளான ஹரிஜனங்களும் வன்னியர்களுந்தான் அந்த இடத்திலே பெரும் பாலும் தவித்துக்கொண்டிருக்கிறார்கள். இந்த ஏரியின் கீழ்ப் பகுதியிலே பெரிய மிராசுதாரோ, ஜமீன்தாரோ இல்லை. கஷ்டப் படுகிறவர்கள், சிரமப்படுகிறவர்கள் தலையில்தான் ஆண்டவன் கை வைக்கிறார். அந்த கிராமத்தில் இருப்பவர்கள் ரொம்ப மோசமான நிலையில் இருக்கிறார்கள். அடுத்த போகம் பயிரிட முடியாமல் மண் மேடிட்டு இருக்கிறது. கவர்னருடைய உரையிலே வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட இடங்களில் மடிப்பு சாகுபடிக்குப் பணம் கொடுத்திருக்கிறோம். கடன் கொடுத்திருக்கிறோம், உரம் கொடுத்திருக்கிறோம், ஆகவே பஞ்சத்திற்கு இடமே இல்லை என்று சொன்னார்கள். ஆனால் எங்கள் தாலுகாதான் வெள்ளத்தினால் அதிகமாக பாதிக்கப் பட்டிருக்கிறது. அங்கே இன்னும் ஏன் என்று கேட்பார் இல்லை. அங்கு மக்கள் காப்பாரற்றும் கேட்பாரற்றும் நாதியற்றவர்களாகக் கிடக்கின்றனர். எழுதியும் கொடுத்திருக்கிறோம். ஏதாவது கொடுக்கிறார்களா, இல்லையா என்று இன்றுவரை ஒன்றும் கலெக்டர் இடமிருந்து பதில் வரவில்லை. எல்லா உதவியும் கொடுத்திருக்கிறோம் என்று கவர்னர் அவர்கள் உரையில் தெரிவித்திருக்கிறார்கள். மற்றவர்கள் இம்மாதிரி சொன்னால் அது ஒரு மாதிரியாக இருக்கும். ஆனால் கவர்னர் அவர்களே அப்படித் தெரிவித்திருந்தும் நிலைமை அசையாமல் இருக்கின்றது. நமக்குத் தெரியாமல் வேறு யாருக்காவது கொடுத்திருக்கிறார்களோ என்று பார்த்தால் யாருக்கும் கொடுத்ததாகத் தெரியவில்லை. இதே மாதிரி என்னுடைய தாலுகாவிலே சூணம்பேட்டிலே மடிப்பு சாகுபடி செய்ய முடியாத நிலையிலே ஜனங்கள் தவிக்கின்றனர். அது ஒன்று.

அடுத்தபடியாக சூணம்பேட்டுக்கும் இடைக்கைநாட்டுக்கும் 5 மைல் இருக்கிறது. அது பாண்டிச்சேரி மாதிரி ஓர் இடம். அந்த இடத்திலே கிட்டத்தட்ட 11,000 ஜனங்கள் இருக்கிறார்கள். அவர்கள் எல்லோரும் மரம் ஏறிகள், மதுவிலக்குச் சட்டம் வந்தது. மதுவிலக்கு ஏற்படுத்திவிட்டோம். இந்த 11,000 பேர்களில் 100-க்கு 90 பேர்கள் மரமேறிகள், அவர்களுக்கு வேறு தொழில் கிடையாது. குடிசைத்தொழில் என்று இப்பொழுது எல்லோரும் ஆரம்பித்திருக்கிறார்களே, அதைத்தான் அவர்களும்

செய்கிருர்கள். (சிரிப்பு) நானும் எதிர்க்கட்சித் தலைவரும், என்ஜினியர், எஸ்டேட் மானேஜர் எல்லோரும் போன மூன்ரு வது வருஷம் அந்த இடத்திற்குப் போயிருந்தோம். "ஏன் இந்தத் தகாத காரியத்தைச் செய்கிறீர்கள், காந்தி மகான் இதற் காகவா இவ்வளவு தியாகம் செய்தார், சர்க்காருக்கு விரோதமாக நடக்கிறீர்களே, இப்படிச் செய்தால் நீங்கள் எந்தபடி முன்னேற முடியும்?" என்று கேட்டோம். அவர்கள் என்ன செய்தார்கள் தெரியுமா? ஒரு ஐந்து வயதுப் பெண்ணைத் தூக்கி கொதிக்கிற மணலிலே போட்டார்கள். எங்களைப் பார்த்து "இந்தக் குழந் தைக்கு கஞ்சி கொடுப்பது யார்? சட்டத்தைப் போட்டு, மதுவை ஒழித்துவிட்டீர்கள், இந்தத் தொழிலே நாங்கள் செய்து வந்த வர்கள். எங்கள் பிழைப்புக்கு வேறு ஏதாவது தொழிலை ஏற் படுத்துங்கள். அதைச் செய்த பிறகு எங்களைப் பார்த்து நீங்கள் ஏன் இப்படிச் செய்கிறீர்கள்? என்று கேளுங்கள்" என்று சொல்லுகிருர்கள். பிழைப்புக்கு வழி சொல்லுங்கள் என்று எங்களைக் கேட்டார்கள். இந்தவிடத்தில் சர்க்கார் ஒரு தொழிலை நடத்திஞல் மிகவும் நல்லது. அங்கே நிறைய குடிசைத் தொழில் களை ஏற்படுத்தி, அந்த மக்களுக்கு விமோசனத்தை ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அந்தக் காலத்திலே, அதாவது 1918-க்கு முன் சூளும்பேடு ஒரு ரிகார்டு போலிஸ் ஸ்டேஷஞக இருந்தது. அந்த வட்டம் 60 கிராமங்களைக் கொண்டது. அதை சித்தாமூருக்கு மாற்றிஞர்கள். சித்தாமூருக்கும் சூளும்பேடுக்கும் 11 மைல் தூரம் இருக்கிறது. சூளும்பேட்டில் இப்பொழுது ஒரு அவுட்போஸ்ட்தான் இருக் கிறது. இந்த மதுவிலக்கு சம்பந்தமான கொலை, கொள்ளை போன்ற விவகாரங்கள் எல்லாம் அங்கேதான் நடக்கிறது. இவ்வளவு தூரம் வந்து இந்த மதுவிலக்குக் கேஸ்களை யார் கண்டு பிடிக்கிருர்கள்? சூளும்பேட்டை ஒரு ரிகார்டு ஸ்டேஷன் ஆக மாற்ற வேண்டுமென்று 1948-லிருந்து நான் சொல்லி வருகிறேன். ஆனல் என் பேச்சை யார் கேட்கிருர்கள்? ஒன்றும் கவனிப்ப தில்லை. ஆகவே சூளும்பேட்டிலே இருக்கிற அவுட் போஸ்டை ரிகார்டு ஸ்டேஷஞக ஆக்க வேண்டும். வெண்ணங்குபட்டிலே அந்த அவுட்போஸ்டை அமைக்க வேண்டும்.

அடுத்தபடியாக, மின்சாரத்தில் நாம் எவ்வளவோ முன்னேற் றம் அடைந்திருக்கிரேம், அதஞல்தான் நிறையத் தொழில்கள் நடக்கின்றன, அதஞல்தான் நம்முடைய சர்க்காருக்கு நல்ல பெயர் என்று எல்லாம் சொல்லுகிருர்கள். எங்கள் கிராமத்திலே 75 லைட்டுகள் போட்டார்கள். மூன்று மாதம் எறிந்தது. இப் பொழுது மூன்று வருஷ காலமாக எறியவில்லை. பஞ்சாயத்துத் தலைவரிடம் போய்ச் சொன்னல், 'எங்களிடம் பணமிருக்கிறது, அந்தப் பணத்திலிருந்து சேரிகளுக்கு லைட் போடலாமென்று உத்தரவு போடச் சொல்லுங்கள்' என்று சொல்லுகிருர். ஆகவே இதற்கு வேண்டிய உத்தரவை பஞ்சாயத்துக்கு அனுப்ப வேண்டு

2nd March 1961] [Sri P. S. Ellappan]

மென்று கேட்டுக்கொள்கிறேன். இதை எல்லாம் எடுத்துச் சொல்லத்தான் முடியும், அங்கே சொல்லி நடக்கவில்லை என்றால், வேறு எங்கே போய்ச் சொல்லுவது? இனியாவது நடக்கட்டும் (சிரிப்பு).

அடுத்தபடியாக புறம்போக்கு நிலங்களைப்பற்றிச் சொல்ல விரும்புகிறேன், நம்முடைய நாட்டிலே எவ்வளவோ முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்று நிதி அமைச்சர் சொன்னார். நான் சொல்லுவதில் நம்பிக்கை இல்லையென்றால், வெளி நாட்டு நிபுணர்கள் சென்னை மாகாணம் ரொம்பவும் முன்னேறியிருக்கிறது என்று எல்லாம் சொல்லுகிறார்களே, என்று அறிக்கை மூலம் சுட்டிக் காட்டுகிறார். நாம் கோடிக்கணக்கிலே திட்டங்களுக்காகப் பணத்தைச் செலவு செய்கிறோம். ஐம்பது ரூபாய், அறுபது ரூபாய் என்று செலவழிப்பதே கிடையாது. அப்படியிருந்தும்கூட இன்றைக்கு நிலைமை எப்படியிருக்கிறது என்றால், ஒரு படி அரிசிக்கு 1 ரூபாய் 6½ அணா கொடுக்கவேண்டும். இரண்டாந்தர அரிசி 14 அணா. அதற்கு அடுத்தபடியாக ஒரு படி 13 அணா. அந்த அரிசி நரிப்பல் மாதிரி இருக்கிறது. (சிரிப்பு). கோடி கோடியாக திட்டங்களுக்குப் பணம் ஒதுக்குகிறீர்களே, ரூபாய்க்கு இரண்டு படி அரிசியாவது கிடைக்கும் நிலைமையை ஏற்படுத்தக் கூடாதா? அப்படிச் செய்தால் ஜனங்கள் எவ்வளவு க்ஷேமமாய் இருப்பார்கள்? புறம்போக்கு நிலங்கள் ஏராளமாகக் கிடக்கின்றன. அவனவனுக்கு பட்டா செய்து, அடமானம் செய்து கொடுத்தால் பஞ்சம் நிவர்த்தியாகும். எல்லாம் சட்டப்படிதான் என்று சொல்லுவதில் என்ன அர்த்தம்? சட்டம் மனிதனுக்காகத்தான் இருக்கிறது. எந்தெந்த வகையிலே ஜனங்களுக்கு நன்மை செய்ய முடியுமோ அந்த வகையிலே சட்டங்களைத் திருத்தி அமைக்கவேண்டும். புறம்போக்கு நிலங்களை ஏழைகளுக்குக் கொடுத்து அவர்களை ஆதரிக்கவேண்டும்.

அடுத்தபடியாக கல்வி வசதியைப் பற்றிச் சொல்லவேண்டும். ஓராசிரியர் பள்ளிகளை எங்கே பார்த்தாலும் திறந்துவிட்டார்கள். ஆனால் உபாத்தியாயர்தான் கிடைக்கவில்லை. ஆசிரியர் இருந்தால் தானே பிள்ளைகளுக்குச் சொல்லிக்கொடுக்க முடியும்? எங்கள் ஜில்லா போர்டு ஆபீசில் கேட்டால், ஆசிரியர்களை "இண்டர்வியூ"-வுக்கு வரச்சொல்லி இருக்கிறோம். நாங்கள் சீக்கிரம் போட்டு விடுவோம் என்று சொன்னார்கள். இண்டர்வியூ ஆகி 6 மாதம் ஆகிவிட்டது. இதுவரை ஆசிரியரைப் போடவில்லை. எங்கள் ஜில்லாவிலே எத்தனை பேருக்கு ஆசிரியாக வருவதற்குப் பயிற்சி அளித்தார்கள்? எத்தனை பேருக்கு வேலை கிடைத்திருக்கிறது, எத்தனை பேருக்குக் கிடைக்கவில்லை, ஏன் அவர்களுக்கு வேலை கிடைக்கவில்லை என்பதையெல்லாம் கல்வி அமைச்சர் அவர்கள் விசாரித்து, காலியாய் இருக்கிற பள்ளிக்கூடங்களுக்கு எல்லாம் உடனடியாக ஆசிரியர்களை நியமிக்கவேண்டுமென்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

[Sri P. S. Ellappan] [2nd March 1961

அடுத்தபடியாக என்ன சொல்லுவது என்றே எனக்குப் புரிய வில்லை. (சிரிப்பு). ஹரிஜனங்கள் விஷயத்தில் கூடுமான அளவுக்கு நன்மை செய்யவேண்டும். பெரிய தொழிற்சாலைகளை ஏற்படுத்த வேண்டுமென்று நாங்கள் கேட்கவில்லை. பஸ் ரூட் பர்மிட்களோ, கான்டிராக்ட் வேலைகளோ வேறெந்த பிஸினெஸ் பற்றியோ கேட்க வில்லை. "குடி தண்ணீர் வசதி செய்து கொடுங்கள், ஹரிஜனங் களுக்கு வீட்டைக் கட்டிக்கொடுங்கள், பாதையைப் போடுங்கள்" என்றுதான் சொல்லுகிறோம். ஆனால் எல்லாம் ஹரிஜனங்களுக்குத் தான் செய்கிறார்கள் என்று சிலர் சொல்லுகிறார்கள். அந்த நிலைமையில் அமைச்சர்தான் என்ன செய்வார்கள்? அவர்களால் ஆனதைச் செய்கிறார். இதுதான் கடைசிக் கூட்டம். பின்னர் நான் இங்கே வரமுடியுமோ என்னவோ. ஆகவே ஹரிஜனங்களுக்கு மனைகள் கொடுக்கும் விஷயம், சேரிகளுக்கு லைட்கள் போடுவது, குடி தண்ணீர் வசதி செய்து கொடுப்பது, பள்ளிக்கூடங்களுக்கு ஆசிரியர்களை நியமிப்பது, புறம்போக்கு நிலங்களை ஏழைகளுக்குப் பிரித்துக் கொடுப்பது, இதுபோன்ற விஷயங்களில் ஹரிஜனங் களுக்குக் கூடுமானவரையில் நன்மை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

1- 0 a.m.

* **SRI S. RAMASAMI NAIDU** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, மூன்று ராஜ்யங்கள் ஒன்றாக இருந்த காலத்தில் இருந்த வரவு செலவுத் திட்டத்தைப் போல், இன்று இரண்டு பிரிந்து போயும், அநேக மடங்குகள் வரவைக் காட்டுவதாகவும், அதற்கு உகந்த செலவையும் காட்டக் கூடிய நிலைமையைக் காட்டி யிருக்கும் நிதியமைச்சரவர்களைப் பாராட்டக் கடமைப்பட்டிருக் கிறோம். புது வரி எதுவும் விதிக்கவில்லை என்பதுடன், விழுந்தி ருக்கும் துண்டையும் சரிக்கட்ட முடியும் என்ற நம்பிக்கை நிதி மந்திரியவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. ஏற்பட்டிருக்கும் துண்டையும் சரிக்கட்டி, அதிகப்படி செலவு செய்யக்கூடிய நிலைமை ஏற்பட்டிருப்பதைக் குறித்து மகிழ்ச்சி அடைய வேண்டும்.

இந்த வரவு செலவுத் திட்டமானது, அன்னிய நாட்டார் தயா ரித்ததை போன்று இருக்கிறது என்று சில அங்கத்தினர்கள் சொன்னார்கள். "போல" "போல" என்றால், இன்னொன்றை மாதிரியாக வைத்துக்கொண்டு சொல்கிறார்கள் என்று கருத்து; ஆகவே, சென்னை ராஜ்யத்துக்கும் தனிப்பட்ட உயிர்நாடி இருக் கிறது என்பதை ஒப்புக் கொண்டதைப் பற்றி மெத்த சந்தோஷம். இந்த ராஜ்யத்தில் 100-க்கு 80-பேர்கள் விவசாயிகளாகவும், விவசாயக் கூலிகளாகவும் இருக்கிறோம். விவசாயினுடைய நிலைமையை எடுத்துக்கொண்டால், மறைமுகமாக வரிகள் விதித் தாலும், வரிகளையெல்லாம் விவசாயிகளிடமிருந்தே வசூலிக்க வேண்டியிருக்கிறது. வரியின் ஒரு பகுதிதான் மற்றவர்களிட மிருந்து கிடைக்கிறது—விற்பனை வரி போன்றவை. மற்ற நிலத் தீர்வை, தண்ணீர்த் தீர்வை, முதலியவை எல்லாம் விவசாயிகளிட மிருந்துதான் வசூலிக்க வேண்டியிருக்கிறது. இன்றைக்கு ராஜ்

2nd March 1961] [Sri S. Ramasami Naidu]

யத்தில், உணவு உற்பத்தியில் தன்னிறைவு கண்டிருக்கிறோம் என்றாலும் கூட, எதிர் பார்த்த அளவு அடையவில்லை என்று நிதி யமைச்சரவர்கள் ஒரு குறையைச் சொல்லியிருக்கிறார்கள். அதற்குக் காரணம், சர்க்காருடைய குறை என்று சொல்ல மாட்டேன். விவசாயிகளின் குறை என்றுதான் சொல்லுவேன். கொடுக்கப்படும் கற்பனைகள் வழியில் விவசாயம் செய்யாததால் உற்பத்திக் குறைவு ஏற்பட்டிருக்கிறது என்று நிச்சயமாகச் சொல்லலாம். சர்க்கார் விவசாயிகளுக்கு எவ்வளவோ நன்மை களைச் செய்து வருகிறார்கள். டிராக்டர், புல்டோசர் போன்ற சாதனங்களைக் கொடுத்தும், விவசாயத்திற்கு வேண்டிய கிணறு, குளம் முதலியவற்றைச் செப்பனிடுவது போன்ற சௌகரியங் களும், பாசன வசதிகளைப் பெருக்குவது முதலியவைகளிலும், அவ்வப்பொழுது வேண்டிய பண உதவியும் செய்து வருகிறார்கள் என்றாலும், விவசாயிகள், ஓரளவுக்கு சர்க்காரைப் புரிந்து கொள்ள வில்லை, திட்டங்களின் எண்ணத்தைப் புரிந்து கொள்ள வில்லை, புரிந்து கொண்டு நிறைவேற்ற முன்வரவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். ஏதோ சர்க்கார் கடமைக்குச் செய்கிறார்கள், மக்களுக்கு நன்மை என்று சொல்கிறார்கள் என்று விவசாயிகூட சொல்லி, சில சமயங்களில் அப்படி நினைப்பதால் தான், விவசாய உற்பத்தி எந்த அளவுக்குப் பெருக வேண்டுமோ அந்த அளவுக்குப் பெருக வில்லை என்று நிச்சயமாகச் சொல்லுவேன். ஆகவே, எதிர் பார்த்த அளவு உற்பத்தி இல்லை என்றால், விவசாயிகளிடமுள்ள இந்தக் குறைகள் நீங்க வேண்டும். இன்றைக்கு இந்த 10 வருஷ மாகத் திட்ட மிட்டு, கிராம விவசாயிகளுக்கு எத்தனை விதத்தில் நன்மைகள் செய்திருக்கிறார்கள் என்பதை எதிர்க் கட்சி அங்கத் தினர்களும் அறிவார்கள். ஆனால், விவசாயிகள் கொடுக்கப்படும் கற்பனைகளை மேற்கொள்ள வில்லை என்பது வருந்தத் தக்கது. அதிகாரிகள் கிராமங்களுக்குச் சென்று, நன்றாக உரக் குழிகள், கம்போஸ்ட் போடுங்கள், விவசாயத்தைப் பெருக்குங்கள் என்றால், அது அவர்கள் படித்த அளவில் சொல்லவில்லை; ஆனால், பரீட்சித்துப் பார்த்து, நன்மை என்று கண்டவற்றைச் சொல் கிறார்கள். நல்ல வித்துக்களைப் போடுவது, ஆழமாக உழுதல் போன்ற முறைகளில் அவர்களைப் பழக்க, நவீன முறையில் விவசாயம் செய்யக் கோருகிறார்கள். அவர்கள் அம்மாதிரிச் செய்திருந்தால், இந்தப் பற்றுக்குறை நீங்கியிருக்கும்.

கிராமங்கள் வளரவேண்டும், அப்படி அவை வளர கிராமங் களில் உற்பத்தி பெருக வேண்டும் என்று கிராமப் பஞ்சாயத்துச் சபைகளை ஏற்படுத்தி, கிராம ராஜ்யத்தை கிராம மக்களிடம் ஒப்படைத்திருக்கிறோம். ஆனால், அவர்களுக்கு நிதி விஷயத்தில் சர்க்கார் இன்னும் கொஞ்சம் தாராளமாக உதவ வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இன்றைக்கு விவசாய அபிவிருத்திக்கு, கனம் ஸ்ரீனிவாச அய்யர் சொன்னது போல், ரஸ்தா வசதிகள் பெருக வேண்டும். முடியாதிருந்த நிதியை ஆதாரமாக வைத்துக் கொண்டு ஜில்லா போர்டுகள் தங்களிடம் இருந்த ரஸ்தாக்களை நல்லபடியாகச் செப்பனிட நிதி வசதியை உத்தேசித்து, பிரதேச

[Sri S. Ramasami Naidu] [2nd March 1961

அளவில், தலைக்கு 40 பைசா என்று கொடுத்து, பழைய ரஸ்தாக்களை எல்லாம் செப்பனிடுவது என்பது முடியாத காரியம். பழைய ரஸ்தாக்களையும், ஸ்தல அபிவிருத்தி, தேசீய அபிவிருத்தி ரஸ்தாக்களையும், மாகாண ரஸ்தாக்களையெல்லாம் கப்பி போட்டு செப்பனிடுவது கஷ்டம். கிராமத்தில் வரி போட்டு செய்யலாம் என்று ஒரு யோசனை கூறப்பட்டது. பஞ்சாயத்துக்கள் ஏற்பட்டு பல வரிகளைப் போட்டு, இன்று வரி இரண்டு மடங்காக இருக்கிறது. பஞ்சாயத்துக்கள் ஏற்பட்ட பிறகு, சட்டப்படி, வீட்டு வரி, மற்றும் பல வரிகளைப் போட்டு, விவசாயிகளும், விவசாயக் கூலிகளும் தாங்கக்கூடிய அளவுக்கு மேல், அவர்கள் இன்றைக்கு வரி கொடுத்து வருகிறார்கள். ஆகவே, அதிகப் படியாக வரி விதித்து, சில காரியங்களைச் செய்வதென்பது இயலாத காரியம். விவசாயத்திற்கு சர்க்கார் உதவிகள் அளிப்பது போல், மற்றும் ரஸ்தாக்களைச் செப்பனிடவும், சுகாதார வசதிக்காகவும், குடிதண்ணீர் வசதிக்காகவும், இன்னும் கொஞ்சம் அதிகப்படியான மானியம் கொடுத்து உதவ முன் வரவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். கிராமங்களுக்கு தாங்களாகவே சுகாதார வசதிகளையும், மற்ற வசதிகளையும் செய்து கொள்ள சக்தி இல்லை. உரக் குழிகள் போட, பொது இடங்களை ஒப்படைக்கச் செய்தால், மிக்க பயன் அளிக்கும். ஒருவர் ஒரு குழி போடுவது அவ்வளவு பிரயோஜனமாக இருக்காது. வீட்டோரங்களையும், ஊரைச் சுற்றியும் கிராமத்தில் சுற்றுப் புற சுகாதாரத்தை நல்ல வகையில் செய்து கொள்ள இயலவில்லை. ஆகவே இதில் சர்க்கார் கவனம் செலுத்த வேண்டும்.

ஒவ்வொரு கிராமத்திற்கும் கட்டாயமாக சாக்கடை கட்ட வேண்டும் என்று முடிவு செய்ய வேண்டும்; ஒவ்வொரு ஊருக்கும் சாக்கடை கட்ட என்று 50 பர்செண்ட் சர்க்காரிலிருந்து மானியம் கொடுத்து உதவ வேண்டும். அப்படிச் செய்தாலொழிய, கிராமத்தின் தெருக்களில், சாக்கடைகள் வற்றாத ஆறுகளாக ஓடிக்கொண்டிருக்கும்.

கல்வி வசதி கிராமங்களுக்கு நல்ல முறையிலே செய்யப்பட்டிருக்கிறது. கல்வி மந்திரியே, நிதி மந்திரியாகவும் இருக்கும் காரணத்தால், சர்க்காரிலே பல நல்ல திட்டங்களை மேற்கொண்டு, பல நன்மைகளைச் செய்திருக்கிறார்கள். ஐந்து மைலுக்கு ஒரு உயர் நிலைப் பள்ளி என்று அமைத்து விவசாயிகளுக்குப் பயன்படச் செய்கிறார்கள். ஆசிரியர்களுக்கும் சம்பளச் சலுகைகளெல்லாம் கொடுக்கிறார்கள். ஆகவே, கல்வி அதிகமாகப் பரவ சாத்தியக் கூறுகள் இருக்கின்றன. கிராமந்தோறும் ஆரம்பக் கல்விச் சாலைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. தற்காலக் கல்வி சம்பந்தமாக அந்த மானியம் வரும்போது பேச சந்தர்ப்பம் எப்படியிருக்குமோ, எனக்கும் எப்படி சௌகரியம் இருக்குமோ என்று இப்பொழுதே அதைப் பற்றியும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

2nd March 1961] [Sri S. Ramasami Naidu]

ஐந்தாவது வகுப்பு வரை கட்டாயக் கல்வி என்று சொல்லப் புகும்போது, அதற்கு இப்பொழுது ஏற்படுத்தப்பட்டிருக்கும் முறை பொருத்தமில்லை. ஐந்து வகுப்பு வரை கட்டாயம் இருக்க வேண்டும். முதலில் இருக்கும் மாணவர் எண்ணிக்கை, ஐந்தாவது வரைக்கும் இருப்பதில்லை; 40, 50 சதவிகிதம் மத்தியில் குறைந்து போய் விடுகிறது. ஆகவே, 14 வயது வரை அல்லது 7-வது வகுப்பு வரை என்று சொல்வதற்குப் பதிலாக, 5-வது வகுப்பு வரை கட்டாயம் என்று ஏற்படுத்த அது சம்பந்தமான ஆராய்ச்சி நடத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். பதினுலாவது வயது அல்லது ஏழாவது வகுப்பு வரையில் கட்டாயக் கல்வியை அமுல் நடத்த வேண்டிய தேவையில்லை. இரண்டு அல்லது மூன்று வருஷப் படிப்பு வீணுகப் போகிறது. ஆகவே நான் சொல்லக் கூடிய யோசனை என்னவென்றால் ஆரம்பக் கல்வி என்பதை ஐந்தாவது வகுப்புடன் நிறுத்திக்கொண்டு அதன் மேல் படிப்பு படிக்க உயர்நிலைக் கல்வியாக சேர்த்து விட்டால் நல்லது. ஐந்தாவது வகுப்பு அல்லது பதினேரு வயது வரையில் கட்டாயக் கல்வியும் அதற்கு மேல் உயர்நிலைக் கல்விக்கும் ஏற்பாடு செய்ய வேண்டும்.

அடுத்தபடியாக விவசாயிகளுடைய நிலைமை இன்றைக்கு கணிசமான அளவில் முன்னேற்றமடைந்திருக்கிறது. துண்டு விழும் பணத்தைச் சரிக்கட்டுவதற்கு விவசாயிகளை நல்ல நிலைமை யில் வைக்கலாம். அதனுல் விவசாயிகளுக்கு என்று அதிகமாகக் கொடுத்திருக்கலாம். இன்றைக்கு ராஜ்யத்திலுள்ள விவசாயி களுக்கு நல்ல நிலைமையை உண்டாக்குவதற்கும், அவர்கள் கணிச மான அளவில் விவசாயப் பொருள்களைப் பெருக்குவதற்கும் வேண்டிய வசதிகளைச் செய்து கொடுக்கவும் ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறேம். அவர்கள் வீடுகள் நல்ல முறையில் இருக்கவும், கணிசமான அளவில் விவசாயத்தைப் பெருக்கிக் கொள்ளவும் வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்துக் கோண்டி ருக்கிறேம். அந்த முறையில் அவர்களுக்கு மின்சாரம் கொடுப்பதன் மூலமாக பல வசதிகளையும் செய்து கொண்டிருக் கிறேம். மின்சாரம் இப்பொழுது விவசாயத்திற்கு வேண்டிய அளவு தாராளமாக விநியோகிக்கப்படுகிறது. இதற்கு முன் மாடுகளை வைத்துக்கொண்டு விவசாயம் செய்யக்கூடிய இடங்களி லெல்லாம் இப்பொழுது மின்சாரம் கொடுக்கப்பட்டு அதன் மூலமாக விவசாயம் செய்து வருகிறுர்கள். அப்படி அவர்களுக்கு மின்சாரம் கொடுக்கப்படுவதால் முன்பு விவசாயம் செய்ததைவிட இப்பொழுது நான்கு அல்லது ஐந்து, இன்னும் சில இடங்களில் பத்து மடங்கும் உற்பத்தியைப் பெருக்கிக்கொண்டு வருகிறுர்கள். அவர்களுடைய வீடுகளில் கூட மின்சாரம் வழங்கப்பட்டு அதனுல் அவர்கள் தங்களுடைய வீடுகளையும் அசுத்தமாக வைத்துக் கொள்ளாமல் சுத்தமான நிலைமையில் வைத்துக்கொண்டிருக்கிறுர் கள். அதன் மூலம் நல்ல வசதிகூட பெற்றிருக்கிறுர்கள். அவர்கள் வசிக்கக்கூடிய தெருக்களுக்கு எல்லாம் இப்பொழுது மின்சாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதனுல் அவர்கள் நல்ல முறையில்

தெருக்களை வைத்துக்கொள்வதற்கும் வசதியாக இருக்கிறது. அந்த முறையில் நம் மாகாணம் முதல் நிலைமையில் இருப்பதற்கு இந்த மின்சாரம் தான் காரணமாக இருக்கிறது. இப்படிப்பட்ட காரியங்களைச் செய்வதற்கு நமது மாகாண சர்க்கார் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகளுக்கு அவர்களை நாம் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். அத்துடன் அந்த இலாகாவைச் சார்ந்த மின்சார அமைச்சர் அவர்களையும் பாராட்டக் கடமை பட்டிருக்கிறோம்.

இத்துடன் விவசாயிகள் உற்பத்தி செய்யக்கூடிய விவசாயப் பண்டங்களை நல்ல முறையில் விற்பனை செய்வதற்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுக்கவேண்டியதாக இருக்கிறது. இப்பொழுது அதற்குச் சரியான முறை இல்லை. அவர்களுடைய பொருள்களை விற்பனை செய்வதற்கு என்று விவசாயக் கூட்டுறவு சங்கங்களையும் மார்க்கெட்டுகளையும் அமைத்தால் அவர்களுடைய பொருள்களை நல்ல விலையில் விற்பதற்கு வசதியாக இருக்கும். அவர்கள் எதிர் பார்க்கக்கூடிய அளவில் விற்பனை ஆகாவிட்டாலும் கூட அவர்களுக்கு கட்டுபடியாகக்கூடிய அளவில் விற்பனை செய்வதற்கு வழி ஏற்படும். இப்பொழுது அப்படிப்பட்ட ஏற்பாடு செய்யப்படவில்லை. ஆகவே இனிமேலாவது அவர்களுடைய பண்டங்களை விற்பனை செய்வதற்கு வேண்டிய விற்பனைக் கூட்டுறவு சங்கங்களையும் மார்க்கெட்டுகளையும் அமைத்துக் கொடுக்க வேண்டும் என்று இந்த அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன். இப்பொழுதுள்ள நிலைமையில் அவர்கள் வசதியற்றவர்களாக இருக்கிறார்கள். இப்பொழுது இருக்கக்கூடியவைகளைவிட அதிகமான விற்பனைக் கூட்டுறவு சங்கங்களையும் மார்க்கெட்டு களையும் அமைத்துக்கொடுத்து அவைகள் மூலமாக விற்பனை செய்வதற்கான ஏற்பாடுகளை உண்டு பண்ணிக் கொடுக்கவேண்டும் என்று சர்க்காரை நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இப்பொழுது மிளகாய் வற்றல் குறைந்த விலைக்கு விற்கப் படுகிறது. அதனால் அதை உற்பத்தி செய்யக்கூடியவர்கள் மிகவும் பாதிக்கப்படுகிறார்கள். அதற்கு வேண்டிய மார்க்கெட்டுகள் இல்லாத காரணத்தால் விவசாயிகள் குறைந்த விலைக்கு விற்கக் கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. விவசாயிகளுக்குப் பணம் இல்லாத காரணத்தால் தங்களுடைய விவசாயப் பொருள்களை வியாபாரிகளுக்கு அவர்கள் கேட்கக்கூடிய விலைக்கு கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. அப்படி இல்லாமல் கூட்டுறவு சங்கங் களும் மார்க்கெட்டுகளும் இருந்தால் விவசாயிகளுக்குத் தேவை யான காலத்தில் அந்தச் சங்கங்களிலிருந்து பணத்தை வாங்கிக் கொண்டு நல்ல விலை விற்கக்கூடிய காலத்தில் தங்களுடைய பொருள்களை விற்கமுடியும். ஆகவே, விவசாயிகள் தங்களுடைய பொருள்களை நல்ல விலையில் விற்கக்கூடிய அளவில் அதற்கான ஏற்பாடுகள் செய்து கொடுக்க வேண்டியது இந்தச் சர்க்காருடைய கடமை என்பதை மட்டும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

2nd March 1961] Sri S. Ramasami Naidu]

விவசாயிகள் தங்களுடைய விவசாயத்தைப் பெருக்குவதற்கு இன்னும் தாராளமாக தண்ணீர் இறவை இயந்திரங்களைக் கொடுக்க சர்க்கார் ஏற்பாடு செய்யவேண்டும். அவ்வாறு பத்து அல்லது பதினைந்து கூட்டுறவு சங்கங்கள் சேர்ந்து இருக்கக் கூடிய இடங்களில் ட்ராக்டர், புல்டோஸர் முதலியவைகளை வாங்குவதற்கு வசதிகளைச் செய்து கொடுக்கவேண்டும். ட்ராக்டர் முதலியவைகள் உற்பத்தியாவதை முதலில் விவசாயிகளுக்கு விற்பனை செய்வதற்கு முதலிடம் கொடுக்க ஏற்பாடு செய்தால் அதனால் விவசாயிகளுக்குப் பிரயோசனப்படும். அதைச் செய்ய வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

விவசாயிகளுக்குத் துணையாக பல சில்லரைத் தொழில்களைச் செய்ய சர்க்கார் ஏற்பாடு செய்யவேண்டும். இப்பொழுது சர்க்கார் ஏற்பாடு செய்திருப்பதில் கதர் ஒன்றுக்குத்தான் முதலிடம் கொடுத்திருக்கிறார்கள். அவ்வாறு மற்றவைகள் கணிச மான அளவில் நடைபெறவில்லை. அதனால் பருத்தி உற்பத்தியாகும் இடங்களில் பருத்தியை அடித்து அதை நூலாகச் செய்யக்கூடிய யந்திரங்களை—இப்பொழுது கோயம்பத்தூரில் கண்டு பிடித்திருக் கிறார்கள்—விவசாயிகளுக்குக் கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டும். இப்பொழுது மின்சாரம் வீடுகளுக்கும் ஒவ்வொரு கிராமத்திற்கும் கொடுக்கக்கூடிய காலத்தில் இதைச் செய்தால் அந்த இயந்தி ரங்களை வைத்துக்கொண்டு நூல் நூற்கக்கூடிய வாய்ப்பு விவசாயி களுக்கு ஏற்படும்; அதை வைத்துக்கொண்டு அவர்கள் கணிசமான அளவில் வருமானத்தைப் பெருக்கிக்கொள்ளு வார்கள். அதன் பிறகு விவசாயிகள் இருக்கக்கூடிய ஊர்களில் இந்த நூல்களைக் கொண்டு பனியன் நெசவு செய்வதற்கும் சர்க்கார் ஒரு ஸ்தாபனத்தை அமைத்து அதில் விவசாயிகள் ஈடு படும்படியாகச் செய்யவேண்டும்.

விவசாயம் அதிகமாக நடக்கும் இந்த காலத்தில், மின்சாரம் அதிகமாக வழங்கக்கூடிய இடங்களில் வேலை இல்லாத் திண்டாட் டம் இப்பொழுது இல்லை என்று நிச்சயமாகச் சொல்லலாம். மின்சாரம் இல்லாத நஞ்சைப் பிரதேசங்களில் இன்னும் வேலை இல்லாத் திண்டாட்டம் இருக்கிறது. அதைப் போக்க வேண்டிய நடவடிக்கை சர்க்கார் எடுத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். விவசாயிகளுக்கும் விவசாயத் தொழிலாளர் களுக்கும் அதிகப்படியான வருமானம் வரக்கூடிய அளவில் அவர் களுக்குத் துணைத் தொழில்களை ஏற்படுத்திக்கொடுக்க சர்க்கார் முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும். அவைகளை ஏற்படுத்திக் கொடுத்து விவசாயிகள் நல்ல நிலைமையில் தங்களுடைய வாழ்க்கையை நடத்துவதற்கும் அவர்களுடைய வருமானத்தைப் பெருக்கிக்கொள்வதற்கும் சர்க்கார் இன்னும் அவர்களுக்கு அதிக மாக வழிவகைகளைச் செய்து கொடுக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். இந்த முறையில் இந்த வரவு செலவுத் திட்டத்தை வகுத்து, மக்களுடைய உற்பத்திச் சக்தியைப் பெருக்குவதற்கும், வாங்கும் சக்தியைப் பெருக்குவதற்கும் சகல

வழிகளிலும் அவர்களுக்கு வசதி செய்து கொடுத்து அவர்கள் சுபிட்சமாக வாழ்வதற்கும் வேண்டிய வழிவகைகளைக் காட்டிக் கொடுத்த நமது கனம் நிதி அமைச்சர் அவர்களையும் அந்தச் சூழ் நிலையை ஏற்படுத்திக்கொடுத்த இந்த சர்க்காரையும் பாராட்டி அவர்களுக்கு என்னுடைய பாராட்டுதலைத் தெரிவித்துக்கொண்டு இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

* SRI T. IRUSAPPAN : உதவி சபாநாயகர் அவர்களே, இன்றையதினம் 1961-62-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கையைப்பற்றிப் பல அங்கத்தினர்கள் பேசினார்கள். நானும் என்னுடைய கருத்தைத் திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பாகச் சொல்வதற்கு முன் வந்து நிற்கிறேன். கனம் நிதி அமைச்சர் அவர்கள் தனக்கு உரிய என்றுமுள்ள முறையில் தமிழ் நாட்டின் நலன்களை மிகப் பெரிய அளவில் உயர்த்தியிருப்பதாகக் கூறினார்கள். ஆனால் என்னைப் பொறுத்த வரையிலும் இந்த நிதி நிலை அறிக்கை ஆளும் கட்சியார் வரும் தேர்தலை முன்னிட்டே நாட்டு மக்களின் நாவிலே தேனைத் தடவிய அறிக்கையாகத்தான் இருக்கிறது. வரும் நிதி ஆண்டில் புதிய வரிகள் ஒன்றும் இல்லை என்று கூறி நாட்டு மக்களையும் எங்களைப் போன்ற எதிர்க் கட்சியார்களையும் அகமகிழ வைக்க அரசாங்கம் நினைத்தால் அது வருந்தத் தக்கதாகவே முடியும்.

இந்த நிதி நிலை அறிக்கை இந்நாட்டு ஏழை விவசாய மக்களையோ அல்லது இந்நாட்டில் பலதரப்பட்ட தொழிலாள பெரு மக்களையோ உயர்த்த ஒருவித வழிவகையும் காணப்படவில்லை. பெரிய பாசனத் திட்டங்கள் ஒருபுறம் இருந்தாலும் சிறிய நீர்ப்பாசனத் திட்டத்திற்கு முக்கியம் கொடுத்து குறிப்பிட்டிருக் கிறார்கள். இருநூறு ஏக்கருக்குக் குறைவாயுள்ள ஆயக்கட்டு ஏரி, குளங்களை எல்லாம் அந்தந்த பஞ்சாயத்து யூனியன்களிடம் ஒப்படைத்து அதன் அபிவிருத்தி வேலைகளைச் செய்யச் சொல்லி அப்பஞ்சாயத்து யூனியன்கள் ரூபாய்க்கு நாலணா விதம் புதிய வரிக்குள் அதிகமாக வசூலிக்கும்படியாகத் தூண்டி ஏழை விவசாயிகளுக்கும் அதை நம்பி நாமும் இதர பலர்களுக்கும் அதிக பளுவை ஏற்றி வரி வசூல் செய்யும் முறை புதிய வரி விதிப்புக் கொள்கை ஏன் இல்லை என்று கனம் நிதி அமைச்சர் அவர்களை நான் கேட்க விரும்புகிறேன். இது போன்ற வரி விதிப்புக் கொள்கை கனம் அமைச்சர் அவர்கள் மக்கள் கண்களுக்கு தெரியாது என்று நினைப்பது சரியா என்று நான் தாழ்மையோடு கேட்க விரும்புகிறேன். அதல்லாமல் ஏற்கெனவே பல மறைமுக வரி விதிப்பு இல்லை என்று கூறுவது முழு பூசணிக்காயைச் சோற்றில் மறைப்பதாகும்.

என்னுடைய தொகுதியில் உள்ள சிறிய நீர்ப்பாசனத் திட்டத்தி லுள்ள புதிய ஏரிகளைக் கட்டுவதற்கும் பழைய ஏரிகளைப் பழுது பார்ப்பதற்கும் கனம் திரு. ராமய்யா அவர்கள் என் தொகுதிக்குச் சுற்றுப் பிரயாணம் வந்திருந்த சமயம் பொது மக்கள் சுமார் 1,300

2nd March 1961] [Sri T. Irusappan]

விண்ணப்பங்கள் கொடுத்ததன் பேரில் கனம் அமைச்சர் அவர்கள் மேற்படி இடங்களைப் பார்வையிட்டு வந்தார். ஆனால் அதன் வேலைகள் நடக்குமா என்ற வழிக்கே ஒரு சிறு ஆதாரங்களும் தெரியவில்லை. அம்மம்பாளையம், காட்டுக்கோட்டை, செருவாச்சூர், மணிவழந்தான், சிவசங்கரபுரம், நாகக்குறிச்சி ஊனத்தூர், வெல்லையூர், காமக்காபாளையம், கூடமலை, செந்தாரப்பட்டி, ராமநாயக்கன்பாளையம், தாண்டானூர், தும்பள், விரகனூர், தம்மம்பட்டி ஆகிய ஊர்களின் பொது மக்கள் கனம் அமைச்சர் அவர்களுக்கு மனுக் கொடுத்தார்கள். அதற்கு சம்பந்தப்பட்ட அதிகாரிகளையும் பார்க்கப்பட்டது. ஆனால் மேற்படி பகுதி விவசாயிகளின் நீர்ப்பாசன வசதிக்கான வழி பிறக்கும் வாய்ப்புத் தெரியவில்லை.

உணவு உற்பத்தியை அதிகப்படுத்தி, நாட்டு மக்களுடைய வறுமையைப் போக்குவதற்கு சர்க்கார் பல காரியங்கள் செய்வதாகச் சொல்கிறார்கள். இதற்காக அரசாங்கத்தார் தீவிர சாகுபடித் திட்டம் என்று கூறுகிறார்களே தவிர, தகுந்த வசதியுள்ள இடங்களை நடைமுறையில் சாகுபடிக்குக் கொண்டுவர எவ்வித நடவடிக்கையும் எடுத்துக்கொள்வதில்லை. என் தொகுதியில் சுமார் 30,000 ஏக்கர் சர்க்கார் தரிசு நிலம் இருந்தும் அங்குள்ள ஏழைகளுக்கும், குறிப்பாகத் தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் சரிவர அவை சாகுபடிக்குப் பிரித்துக்கொடுக்கப்படவில்லை. காரணம் அந்தப் பகுதி கணக்குப் பிள்ளை, சம்பந்தப்பட்ட அதிகாரிகள் இவர்கள் அந்த வட்டாரத்தில் உள்ளவர்களுக்கு நிலம் கொடுக்காமல் வெளியூர்களில் இருந்து, வெளித் தாலுக்காவில் இருந்து வருகிறவர்கள் ஒரு குடும்பத்திற்கே பத்து ஏக்கர், பதினைந்து ஏக்கர், 30 ஏக்கர் என்று கொடுத்துவிடுகிறார்கள். இதைபற்றி மாவட்ட அதிகாரிக்கும், சம்பந்தப்பட்ட இதர அதிகாரிகளுக்கும் பல மனுக்கள் எழுதியும், நேரில் சொல்லியும் இது விஷயம் கவனிக்கப்படவில்லை. உடனடியாய் இதை அரசாங்கம் கவனிக்கவேண்டுமாய்க் கேட்டுக்கொள்கிறேன்.

ஹரிஜன விவசாயக் கூட்டுறவு காலனி என்னுடைய தொகுதியில் ராமநாயக்கன்பாளையத்தில் ஆரம்பிக்கப் போவதாகச் சொல்லப்பட்டது. அதன் காரணமாக 66 அங்கத்தினர்களைச் சேர்த்து 530 ஏக்கர்களைச் சாகுபடி செய்ய மார்ச் முடிவிற்குள் 33 கிணறுகளை வெட்டப்போவதாகச் சொன்னார்கள். ஆனால் அவ் வேலை அப்படியே நின்றுவிட்டது. ஆகவே மேலும் எல்லா நிலங்களையும் ஹரிஜன் ரிசர்வ் நிலமாக ஒதுக்கி முக்கியமாய் உள்ளூர் ஏழை விவசாயிகளுக்கு அடமானம் செய்து கொடுத்து, ஹரிஜன கூட்டுறவு காலனியை உடனடியாய் அமைத்துத் தரவேண்டுமாய் அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக நாட்டு மக்கள் மத்தியில் கூறி வந்த உச்ச வரம்பு நிலச் சீர்திருத்தச் சட்டம்பற்றி கவர்னர் பெருமான் பிரசங்கத்திலும், கனம் நிதி அமைச்சர் அறிக்கையிலும் அதைப் பற்றிய விபரமே தெரியவில்லை. நில உச்ச வரம்புச் சட்டம் என்ன

வாயிற்று? அது கைவிடப்பட்டதா? இல்லையென்றால், அது அமுலுக்கு வந்தால் வரும்நாள் எப்பொழுது என்பதைக் கனம் அமைச்சர் அவர்கள் குறிப்பிடவேண்டுமாய்ப் பணிவோடு கேட்டுக் கொள்கிறேன்.

பெரும்பாலும் கிராமப்புறங்களில் விவசாயத்தையே நம்பி வாழ்ந்துவந்த தாழ்த்தப்பட்ட மக்களில் ஒரு பிரிவாகிய அருந்ததியர்கள் மின்சார அபிவிருத்தியால் பாரம்பரைத் தொழில் பாதிக்கப்பட்டு வாழ வழியின்றித் தவிக்கிறார்கள். ஆகவே அரசாங்கத்தார் குடிசைத் தொழில் அபிவிருத்தித் திட்டத்தின் மூலம் தகுந்த பல உதவிகளை அவர்களுக்கு உடனடியாகச் செய்து கொடுத்து அவர்களும் மனிதர்களாக வாழ வழி செய்யவேண்டுமாய்த் தாழ்மையோடு மிகமிக முக்கியமாயும், குறிப்பாயும் கேட்டுக்கொள்கிறேன்.

முன்பு விவசாயத்திற்கு பம்பு செட்டு வைக்கிறபோது ஹார்ஸ் பவருக்கு 50 ரூபாய் என்று இருந்ததை இப்போது மாற்றி முற்போக்கு இடத்திற்கு 45 ரூபாய் எனவும், பிற்போக்கு இடத்திற்கு 35 ரூபாய் எனவும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதை ஒருபுறம் ஏற்றுக்கொள்வதாய் இருந்தாலும் என்னுடைய தொகுதியைப் பிற்போக்குப் பகுதியாக மாற்றி ஹார்ஸ் பவருக்கு 35 ரூபாயாக நிர்ணயித்துத் தரவேண்டும் என்பதாகப் பணிவோடு கேட்டுக் கொள்கிறேன்.

என்னுடைய தொகுதியில் உள்ள தாழ்த்தப்பட்ட மக்களுக்குக் குடிதண்ணீர்க் கிணறும், குடியிருப்பு வீட்டுதவியும், நடைபாதை, மயானம், இதர பல சுகாதார வசதிகள் பல செய்துகொடுக்க வேண்டுமாய் அதிகாரிகளுக்குப் பல விண்ணப்பங்கள் கொடுத்தும், நேரில் சொல்லியும் கடந்த நான்கு ஆண்டு காலமாய் நானே சட்ட மன்றத்தில் வலியுறுத்திக் கூறியும் இதுவரை மேற்படிக் குறைகளைத் தீர்க்க முடியவில்லை. ஆகவே அக்குறைகளை உடனடியாகத் தீர்க்க வேண்டுமாய்க் கேட்டுக்கொள்கிறேன்.

ஆத்தூர் மணிவிழுந்தான் மாஜி ராணுவத்தினர் காலனியில் சுமார் 100 மாஜி ராணுவ விவசாயிகள் குடியேறி சுமார் 2 வருஷ காலமாய் தங்கள் சொந்தப் பொறுப்பிலேயே விவசாயம் செய்து கொண்டு வருகிறார்கள். மாஜி ராணுவத்தினர் காலனிக்கென 3,500 ஏக்கர் தரிசு நிலங்கள் ஒதுக்கப்பட்டுள்ளது. 25—11—60-லிலும், 28—11—60-லிலும் டெல்லியில் இருந்து ரீசெட்டில்மெண்டு ஆபீசர் அவர்கள் அங்கே வந்து தணிக்கை செய்து இருக்கிறார்கள். நாளதுவரையில் அவ்விவசாயிகளுக்கு மத்திய அரசாங்கமோ, நமது மாநில அரசாங்கமோ எவ்வித உதவியும் அளிக்கவில்லை. அப்படியின்றி மாடு வாங்கவும், உரம், விதை, கருவி முதலியன வாங்கவும் அவர்களுக்கு சர்க்கார் எல்லா வகையிலும் உதவி செய்யவேண்டுமாய் இந்தச் சந்தர்ப்பத்தில் கேட்டுக்

2nd March 1961] [Sri T. Irusappan]

கொள்கிறேன். இப்படிப் பல காரியங்களைச் செய்யாது பேசுவது வெறும் தேர்தல் பிரசாரகண்டாவாகத்தான் இருக்கும் என்று சொல்லிக்கொண்டு எனக்குப் பேச சந்தர்ப்பம் அளித்த தலைவருக்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறேன். வணக்கம்.

2-00 p.m.

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 8–30 a.m. tomorrow.

The House then adjourned.

V.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

A.—*STATUTORY RULES AND ORDERS.*

168. *Amendments to the Madras Industrial Establishments (National and Festival Holiday Rules)*, 1959 *issued in G.O. Ms. No.* 4318 *Industries Labour and Co-operation (Labour), dated* 12*th September* 1960. *(Laid on the table of the House under section* 12 (3) *of the Madras Industrial Establishments (National and Festival Holidays) Act*, 1958 *(Madras Act* XXXIII *of* 1958).

B.—*REPORTS, NOTIFICATIONS AND OTHER PAPERS.*

* 75. *Supplement to Detailed Budget Estimate* (1) *Second Five year Plan* (2) *Third Five Year Plan.*

* 76 *Review of the Second Plan—Madras State.*

*77. வரவு செலவுத் திட்டச் சொல்லகராதி (ஆங்கிலம்-தமிழ்).

78. *Short Reviews of the activities of the Madras Record office, Tribunal for Disciplinary proceedings and the Madras Public Service Commission for the first half of* 1960–61.

79. *Amendments to the Private Sanitary Conveniences (Constructions, Maintenance and Supervision) Rules*, 1941 *issued in G.O. Ms. No.* 2470, *Health, dated* 1*st October* 1960 *under the Madras Public Health Act*, 1939 *(Madras Act III of* 1939).

* Placed on the table of the House on 25th February 1961.